## எமது இதர ஆன்மிக நூல்கள்

பாதுகாப்புக்கான கவசங்கள்
துணைபுரியும் தோத்திரங்கள்
அதிர்ஷ்டம் தரும் அஷ்டகங்கள்
சுகமளிக்கும் சூக்தங்கள்
அருள் சுரக்கும் அன்னை
கருணை காட்டும் கந்தன்
கிருபை செய்யும் கண்ணன்
உடனே உருகும் உருத்திரன்
ஸௌந்தர்யலஹரீ (முதலியன)
சின்னச் சின்ன சுலோகங்கள்
இதிஹாஸ புராணச் சுலோகங்கள்
வினை தீர்க்கும் தோத்திரங்கள்
சிறப்புத்திருத்தலங்கள்
மகான்களின் வாழ்வும் வாக்கும்
அருணம் (சூரிய நமஸ்காரம்)
விவாக மந்திரங்கள் எதற்காக ?
நவக்கிரக ஆராதனை
ஒன்பது நூல்கள் ஒன்பது கோள்கள்

# ஜோதிர்லிங்கங்கள்

## ( சிவத்தலங்கள் )

பன்னிரு ஜோதிர்லிங்கங்களும் அவற்றின்
புராண வரலாறு, விசேஷ அம்சங்கள்
ஆலய அமைப்பு, செல்லும் மார்க்கம்
தங்கும் வசதி முதலிய விளக்கங்
களுடன் கூடிய அரிய நூல்



ஆசிரியர் :
டாக்டர் (ஸ்ரீமதி) கே. என். சரஸ்வதி

பதிப்பாசிரியர் :
எம். ஏ. ஜெய்சங்கர்






கூடலங்குடி பப்ளிகேஷன்ஸ்
38, நடேச அய்யர் தெரு
தி. நகர் பஸ் நிலையம் அருகில்
சென்னை - 600 017.

 [இரண்டாம் பதிப்பு

முதற் பதிப்பு : பிப்ரவரி 1990
இரண்டாம் பதிப்பு : அக்டோபர் 1992



**விலை ரூ. 9-00**

---

அச்சிட்டோர் :
ஜெய்சங்கர் பிரிண்டர்ஸ்
38, நடேச அய்யர் தெரு
தி. நகர் (பஸ் நிலையம் அருகில்)
சென்னை-600 017. போன் : 443406

# பொருளடக்கம்

33/2

# முகவுரை

சிவம் என்றால் மங்களம் என்று பொருள். ஆரம்பமோ முடிவோ இல்லாதது. பிறப்பும் இல்லாமல் இறப்பும் இல்லாமல் பேரொளியாய் விளங்கும் ஜோதிஸ்வருபத்திற்குச் சிவம் எனப்பெயர். அந்த ஜோதிர்லிங்கம்தான் சகல உலகங்களுக்கும் ஆதாரம் என வேதங்கள் கூறுகின்றன.

அந்த லிங்கத்திலிருந்து பிரம்மா, விஷ்ணு, ருத்ரன் தோன்றினர். பிரமன் சகல உலகங்களையும் படைத்தவர், விஷ்ணு அவற்றைக் காத்து ரக்ஷித்தவர், ருத்ரன் முடிவில் அனைத்தையும் தனக்குள்ளே ஒடுக்கிக் கொள்பவர்.

நமது நாட்டில் அனேகச் சிவஸ்தலங்கள் உள்ளன. அவற்றுள் 'ஜோதிர்லிங்க ஸ்தலங்கள்' என அழைக்கப்படும் 12 ஸ்தலங்கள் உள்ளன. தென்னாட்டில் மல்லிகார்ஜுனமும், ராமேசுவரமும் உள்ளன. மற்றவை வட இந்தியாவில் உள்ளன.

ஜோதிர்லிங்கம் அமைந்திருக்கும் முறைகளைக் கவனிக்கும் பொழுது அவை தேசிய ஒற்றுமையை விளக்குவதைக் காணலாம். 'த்வாதச' என்றால் சம்ஸ்கிருதத்தில் 12 எனப் பொருள்.

பெரியபுராணத்தில் உள்ள கடவுள் வாழ்த்து 'அலகில் சோதியர்' 'ஜோதிமயமான லிங்கம்' எனப் பொருள் பட அமைந்துள்ளது. உலகிலுள்ள இருளை நீக்கிப் பிரகாசம் ஏற்படுத்த சூரியனின் ஒளி அவசியமாகிறது.

அதுபோல் அறியாமையை அகத்திலிருந்து விலக்கி ஞானஒளி பெற ஒரு ஜோதி தேவை அல்லவா? சிவபெருமானை வழிபட்டால் உள்ளம் ஒளிமயமாகும். சிவபெருமான் ஜோதிஸ்வருபமாக விளங்கினதை விளக்கப் பல

புராணக்கதைகள் உள்ளன. 12 ஜோதிர்லிங்கத் தலங்களும் சுவையான புராணக் கதைகளை ஆதாரமாகக் கொண்டவை.

ஸோமநாதர், மல்லிகார்ஜுனர், வைத்தியநாதர், மாகாளர், ஓங்காரேசுவரர், பீமசங்கரர், நாகேசர், குசுமேசுவரர், த்ரியம்பகர், விசுவநாதர், கேதாரீசுவரர், ராமேசுவரர்—இவர்கள் ஜோதிர் லிங்க வடிவங்களாகும்.

இத் திருத்தலங்கள் ஒவ்வொன்றிற்கும் தனித்தனியாகப் புராணக் கதைகளும், சிறப்புச் செய்திகளும் உள்ளன. புராணக்கதை, ஆலய அமைப்பு, செல்லும்வழி, தரிசித்தல் மூலம் ஏற்படும் நன்மை: ஆகிய யாவற்றையும் ஒருங்கே தொகுத்து எளிய முறையில் வெளியிட்டிருக்கிறோம்.

என் குருநாதரும், தகப்பனாருமான ப்ரும்மஸ்ரீ கடலங்குடி நடேச சாஸ்திரிகள் இப்பூத உடலை நீத்து புகழுலகு எய்திய தினம் 'சிவராத்திரி' தினமாகும். அம்மகானுக்குச் செலுத்தும் காணிக்கையாக இந்த ஜோதிர்லிங்கத்தைப் பற்றிய நூலைப் படைத்து அளித்துள்ளேன்.

குறுகிய நேரத்தில் தொகுத்து வெளியிட்டதால் சொற்குற்றம் பொருட்குற்றம் இருப்பின் அவற்றை நீக்கி எங்களுடைய இதர வெளியீடுகளுக்கு ஆதரவு தந்த வாசகர்கள் இந்நூலின் இரண்டாம் பதிப்புக்கும் ஆதரவு தருவார்கள் என்ற பூரண நம்பிக்கையுடன் இதைப் படைக்கிறேன்.

யாவரும் சிவப்பிரஸாதத்திற்குப் பாத்திரர்களாகும்படி பிரார்த்திக்கிறேன்.

விஜயதசமி
06—10—1992

கே. என். சரஸ்வதி.

# பன்னிரு ஜோதிர் லிங்கங்கள்



உ

சிவமயம்



# ஜோதிர்லிங்கங்கள்

## சிவத்தலங்கள்

சிவ பரம்பொருளைச் சோதியாகவும் சுடராகவும் சூழ் ஒளி விளக்காகவும் கண்டு காட்டுவார் மாணிக்கவாசகப் பெருமான். சிவபெருமான் சோதி வடிவாக விண்ணளாவ நின்று, சோதிச் சொரூபத்தை விளக்கிய தலம் அருணாசலம்.

சிவத் தலங்கள் பலவற்றுள் 'ஜோதிர்லிங்கத் தலங்கள்' என்று பன்னிரண்டு உள்ளன. தென்னாட்டிலுள்ள ராமேசுவரமும் மல்லிகார்ச்சுனமும் தவிர, மற்ற ஜோதிர்லிங்கத் தலங்கள் எல்லாம் வடநாட்டிலேயே உள்ளன. எல்லா ஜோதிர்லிங்கங்களையும் தரிசித்துப் பேறு பெற்ற அன்பர்களும் உள்ளனர்.

ஜோதிர்லிங்கங்கள் பன்னிரண்டும் அமைந்திருக்கும் முறையானது தேசிய ஒற்றுமையை விளக்குவதாக உள்ளது. கேதாரத்திலுள்ள கேதாரீசுவரர் திருக்கோவில் வடக்குக் கோடியிலும் இராமேசுவரத்திலுள்ள இராமநாதப் பெருமாள் திருக்கோயில் கிழக்குக்கோடியிலும் அமைந்துள்ளன.

சம்ஸ்கிருதத்தில் 'த்வாதச ஜோதிர்லிங்கம்' என்று சொல்வார்கள். தசம் என்றால் பத்து. த்வா என்பது இரண்டைக் குறிக்கிறது. ஆகையால் த்வாதசம் என்றால் பன்னிரண்டு என்று பொருள். 'ஜோதி மயமான லிங்கம்' என்று பொருள்படுமாறு பன்னிரண்டாம் திருமுறையாகிய பெரிய புராணத்தில் கடவுள் வாழ்த்துச் செய்யுளில் 'அலகில் சோதியன்' என்ற தொடர் அமைந்துள்ளது. 'அலகில் சோதியன் மலர் சிலம்படியை'த் தலைமேல் சூடி, சேக்கிழார் பெரிய புராணத்தைத் தொடங்கியிருக்கிறார்.

உலகத்து இருளைக் கதிரவன் என்ற ஜோதி நீக்குவது போல் அறியாமை என்ற அசத்திருளைப் போக்கவும் ஒரு ஜோதி தேவையல்லவா? அதனால்தான் ''உள்ளொளி பெருக்கும் ஒளிப்பிழம்பாய்'' சிவபரம்பொருளைத்தேவாரம் பாடிய சமயக் குரவர்கள் அப்படிப்பாடியிருக்கின்றனர்.

''நனவிலும் கனவிலும் நாளும் தன்னொளி
நினைவிலும் எனக்குவந்(து) எய்தும் நின்மலன்''

என்ற திருஞான சம்பந்தப் பெருமான் பாடியிருக்கிறார். ''மனத்தைக் கரைத்து மலம் கெடுக்கும் நின்மலனாம்'' சிவபெருமானை நினைவில் கொண்டால் உள்ளம் ஒளிமயமாகும். இறைவன் ஒளி வடிவாகி உள்ளத்தில் 'வந்தமர்வான்' என்பது மேற்சொன்ன பதிகத்தின் பொருள்.

''ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்
சோதிக்க வேண்டா: சுடர்விட்டுளன் எங்கள் சோதி''

என்று மேலும் கூறுகிறார். சோதித்து அறியமுடியாத

சிவனின் ஜோதிச் சொரூபத்தைச் சம்பந்தர் இங்கே குறிப்பிடுகிறார்.

ஜோதிச் சொரூபத்தின் அடிமுடியை அறிய முடியாத சம்பவம் ஒரு கதையாக விளங்குகிறது.

யோக நித்திரையில் ஆழ்ந்திருந்த திருமாலின் நாபிக் கமலத்தினின்றும் தோன்றிய நான்முகனுக்கும், திருமாலுக்கும், "தங்களில் உயர்ந்தவர் யார்?" என்ற சர்ச்சை உண்டாயிற்று.

அந்த சமயத்தில் அவர்கள் இருவருக்கும் இடையில் மிகுந்த ஒளி வீசும் அனற்பிழம்பு தோன்றி, வானளாவ நின்றது. சற்றுமுன் ஏதும் இல்லாத இடத்தில் இப்படி விண்ணளாவ நின்ற சோதிப்பிழம்பு அவர்களின் கவனத்தைக் கவர்ந்தது. தங்களின் சச்சரவை மறந்த நான்முகனும் திருமாலும் அந்தச் சோதியின் அடியையும் முடியையும் காண ஆவல் கொண்டனர்.

திருமால் பன்றி உருவெடுத்துப் பூமியை அகழ்ந்து கொண்டு தொடக்கத்தைக் காணப் புறப்பட்டார். நான்முகன் அன்னப்பட்சி உருக்கொண்டு ஜோதியின் பிழம்பின் முடிவைக் காண விண்ணிலே பறந்தார். இருவராலும் அடியையோ முடியையோ காண முடியவில்லை.

ஆனால் அன்னமாகப் பறந்த பிரமன், தான் முடியைக் கண்டதாகவும் ஜோதியின் தலையிலிருந்த இந்தத் தாழம் பூவே சாட்சியென்றும் திருமாலிடம் கூறினான். தாழம் பூவும் பொய்ச் சாட்சி கூறியது.

அந்தச்சமயத்தில் ஜோதிப் பிழம்பு மறைந்தது; சிவபெருமான் காட்சியளித்தார். முடிவைக் காணாத பிரமன் பொய் சொன்னதை அறிந்த சிவபெருமான், கோபம் அடைந்து அவன் தலையொன்றைக் கொய்து விட்டார்.

தாழம்பூவையும் "தன் பூசைக்கு ஒவ்வாத மலர்" என்று தள்ளினார். "பொய்யுரைத்த நான்முகனுக்கு ஆலய வழிபாடு இல்லாமல் போகட்டும்" என்று சபித்தார்.

சிவபெருமான் ஜோதிச் சொரூபமாக விளங்கினர் என்பதற்கு இதுவே காரணம். திருவண்ணாமலைத் தலம் இதை நினைவூட்டி வருகிறது. பன்னிரு ஜோதிர்லிங்கம் என்ற தலங்களும் இந்த நிகழ்ச்சியை நினைவூட்டி நிற்கின்றன. மிகவும் தொன்மையான தலங்கள் அவை. அவை யாவன:

குஜராத் மாநிலத்திலுள்ள ஸோமநாதரும், ஆந்திர மாநிலத்திலுள்ள ஸ்ரீ சைல மல்லிகாரிச்சுனரும், பரலி வைத்தியநாதரும், மத்தியப் பிரதேசத்திலுள்ள உஜ்ஜைனி மகாகாலரும், மாந்தாதா என்ற இடத்திலுள்ள ஓங்காரேசுவரரும், மகாராஷ்டிரத்திலுள்ள பீமசங்கரர், நாகேசர், குஸ்மேசர், த்ரியம்பகர் ஆகிய நான்கும் காசிவிசுவநாதரும், இராமேசுவரத்திலுள்ள இராமநாத சுவாமியும்-ஜோதிர்லிங்க வடிவமாகும்.

இந்தத் திருத்தலங்களைத் தொகுத்துக் கூறும் சம்ஸ்கிருதச் சுலோகம் ஒன்று இருக்கிறது:

ஸௌராஷ்ட்ரே ஸோமநாதம்
ஸ்ரீ ஶைலே மல்லிகார்ஜுனம்
உஜ்ஜயின்யாம் மஹாகாளம்
ஓங்கார மமலேஶ்வரம் ||

பரல்யாம் வைத்யநாதம்ச
டாகின்யாம் பீமஶங்கரம் |
ஸேதுபந்தே து ராமேஶம்
நாகேஶம் தாருகாவனே ||

வாராணஸ்யாம் து விச்வேஶம்
த்ரயம்பகம் கௌதமீதடே |
ஹிமாலயே து கேதாரம்
குஸ்மேஶம் ச ஶிவாலயே ||

இந்த ஜோதிர்லிங்கத் தலங்கள் ஒவ்வொன்றுக்கும் தனித்தனியாகப் புராணக் கதைகளும் சிறப்புச் செய்திகளும் உள்ளன. தரிசித்தால் இன்ன இன்ன நன்மைகளைப் பெறலாம் என்ற விவரங்களும் அந்தக் கதைகளில் காண்கின்றன.

நிலத்தின் கீழ் எல்லாம் நீர் எங்கும் பரவி இருந்தாலும் தோன்றுகின்ற இடத்தில் மட்டும் தண்ணீர் கொப்பளித்துக் கொண்டு மேலெழும்பி வருவதுபோல் இறைவனின் தண்ணளி எங்கும் பரவியிருந்தாலும் மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய சிறப்புகளினால் சில இடங்களில் இந்தத் தண்ணளியை மக்கள் உணர்ந்து இன்பம் காணமுடிகிறது. திருச்செந்தூர், திருப்பதி ஆகிய இடங்களில் மட்டும் பக்தர்கள் அதிகமாகச் செல்வது இந்தக் காரணத்தினால்தான்.

திருவாரூர், திருவானைக்காவல், திருக்காளத்தி, திருவண்ணாமலை, சிதம்பரம் ஆகிய இவை ஐந்தையுமே 'ஐம்பூதத் தலங்கள்' என்பர். இப்படிச் சிவபெருமானுடைய வீரச் செயல்களை விளக்கும் திருத்தலங்கள் எட்டு உள்ளன அவற்றை 'அட்டவிரட்டம்' என்பர்.

திருவாரூரில் பிறந்தாலும் சிதம்பர தரிசனம் செய்தாலும் காசியில் இறந்தாலும் திருவண்ணாமலையைப் பற்றி நினைத்தாலும் முக்தி பெறலாம் என்ற ஒரு வழக்கு இருக்கிறது. திருவெண்காடு திருவையாறு திருவிடைமருதூர் சாயாவனம் திருவாஞ்சியம் மயிலாடுதுறை ஆகிய தலங்களைக் காசிக்கு நிகரான தலங்களாகத் திருவெண்காட்டுத் தலபுராணம் கூறுகிறது.

காசி கேதாரம் உஜ்ஜைனீ நாசிக் த்ரியம்பகம் ஆகிய இந்த ஐந்தும் மோட்சத்துக்கு வழிகாட்டும் ஐந்து விளக்குகள் என்று 'தேவி பாகவத'த்தில் சொல்லப்பட்டிருக்கிறது. 'சப்தவிடங்கத் தலங்கள்' என்று ஏழு தலங்களும் உள்ளன. இவை எல்லாம் சிறப்புத் திருத்தலங்கள் என்ற வரிசையில் சேர்கின்றன.

ஜோதிர்லிங்கத் தலங்களைப் பற்றியுள்ள சுலோகத்தில் கூறியபடி 'ஸோமநாதம்' என்ற தலம்தான் முதலில் வருகிறது. ஸோமநாதர் என்ற ஜோதிர்லிங்க மூர்த்தியைப் பற்றி இப்பொழுது பார்க்கலாம்.

## 1. ஸோமநாத லிங்கம்



ஸோமநாதர்

ஸௌராஷ்ட்ரதேஶே விஶதே (அ) திரம்யே
ஜ்யோதிர்மயம் சந்த்ரகலாவதம்ஸம் |
பக்தி ப்ரதானய க்ருபாவத்ர்ணம்
தம் ஸோமநாதம் ஶரணம் ப்ரபத்யே ||

சௌராஷ்ர மாநிலத்தில் கத்தியவாரி தீபகற்பத்தில் உள்ளது ஸோமநாதம் என்ற தலம். இது மிகவும் புராதனமானது. இந்த ஆலயம் பலமுறை அந்நியர்களால் தாக்கப்பட்டுச் சேதமடைந்திருக்கிறது.

முதலில் இந்தக் கோயில் தங்கத்திலும் பின்னர் வெள்ளியிலும் கட்டப்பட்டிருந்ததாக வரலாறு கூறுகிறது. இந்தக் கோயில் செல்வச் செழிப்பினால் பலமுறை அழிவுக்கு ஆட்பட்டிருக்கிறது. இப்போதைய அமைப்பு 1951இல் தான் ஏற்பட்டது.

குஜராத் மாநிலத்தில் வீரவல் ரெயில் நிலையத்திலிருந்து மூன்று கிலோ மீட்டர் தொலைவிலுள்ள பிரபாஸப் பட்டணத்தில் இந்தக் கோயில் அமைந்திருக்கிறது. தேவப் பட்டணம் என்றும் இதை அழைப்பர்.

இந்தத் தலத்தின் தோற்றத்தைப் பற்றி ஸ்காந்த புராணத்தில் காணலாம். பிரபாஸ காண்டம் என்று தனிப் அத்யாயமே இருக்கிறது. இந்தப் பிரபாஸப் பட்டணத்துக்குக் கிழக்கே ஹிரண்யா, விரஜனீ, இலங்கு, கபிலா, ஸரஸ்வதி என்ற ஐந்து ஆறுகள் சங்கமமாகின்றன. இவற்றில் இரண்டு அந்தர்வாகினியானதால் (கண்ணுக்குத் தெரியாதன) இதையும் திரிவேணி சங்கமம் என்று அழைக்கிறார்கள்.

இந்தத் தலத்தைப் பற்றிய குறிப்பு ரிக் வேதத்திலும் வருகிறது. ஒன்பதாம் மண்டலத்தின் இறுதியில் இப்படி வருகிறது.

யத்ர கங்கா ச யமுனா
யத்ர ப்ராசீ ஸரஸ்வதீ
யத்ர ஸோமேஶ்வரோ தேவ
தத்ர மாமம்ருதம் க்ருதீந்
த்ராயேந்தோ பரிஸ்ரவ ||

"எங்கே ஸரஸ்வதி, கங்கை, யமுனை ஆகிய நதிகள் சங்கமமாகின்றனவோ, எங்கே ஸோமநாதர் கோயில் கொண்டுள்ளாரோ அங்கே அழிவற்றவனாகச் செய். ஓ, சந்திரனே! இந்திரனுக்காக அமுதத்தைப் பொழிவாய் என்பது இந்த ரிக்கின் பொருள்.

இப்போதுள்ள கோயில் அமைப்பைக் கட்டியவர் இந்தோர் மகாராணி அகல்யாபாய். இவ்வாலயம் கோட்டையைப் போல் அமைந்துள்ளது. கோயிலில் பிரதானலிங்கம் பூமிக்கு அடியில் மறைவாக உள்ளது. ஸ்வயம்புமூர்த்தி மிகச் சிறியது. கைகளால் தடவித்தான் உணரமுடியும்.

இதன் மேற்புறத்தில் யாவரும் தரிசிக்கும் வண்ணம் பெரிய லிங்க உருவமே உள்ளது. இது பிரம்மாவினால் நிறுவப்பட்டது என்றும், 'பிரம்மசிலை' என்றும் கூறுகிறார்கள்.

இந்த ஆலயம் வைடூர்யமணி பர்வதம் என்ற குன்றின் மேல் அமைந்திருக்கிறது. இதற்கு அருகில் சூரஜ்மந்திர் என்ற சூரியனின் கோயில் இருக்கிறது. முந்தையகோயில் அமைப்பில் இருந்த அழகிய சிற்பங்களைத் தனியாகப் பொருட்காட்கிச் சாலையில் வைத்திருக்கின்றனர். கோயிலை அடுத்துப் 'பாலக தீர்த்தம்' என்ற திருக்குளம் உள்ளது.

## புராணவரலாறு

அசுவினி முதலிய தன் இருபத்தேழு பெண்களையும் தக்ஷனானவன் சந்திரனுக்கு மணமுடித்துக் கொடுத்தான். மனைவிமார் எல்லோரிடமும் சமமாக அன்பு பாராட்டி மனையறம் பேணும்படி தக்ஷன் கூறி தன் பெண்களை அனுப்பி வைத்தான்.

ஆனால் சந்திரன் ரோகிணியிடம் மட்டும் அதிக அன்பு செலுத்தினான். தங்களை அலட்சியம் செய்வதைக் கண்ட பிற பெண்கள் தந்தையிடம் போய் முறையிட்டார்கள்.

தக்ஷன், முதலில் தகுந்த புத்திமதிகளைச் சந்திரனுக்குக் கூறினான். ஆனால் சந்திரன் அந்த அறிவுரையையும் கேட்கவில்லை. கோபம் அடைந்த தக்ஷன், ''சந்திரா, நீ என் வார்த்தையைக் கேட்கவில்லையாதலால், உன் கலைகள் தேய்ந்து நாளடைவில் குறைந்து போவாயாக'' என்று சாபமிட்டு விட்டான்.

மாமனாரின் இந்தச் சாபத்தைக் கேட்டவுடன் சந்திரன் வெலவெலத்துப்போய் தேவர்களிடம் எல்லாம் போய் முறையிட்டான். எப்படியாவது காப்பாற்றும்படிப் பிரமனிடம் போய் வேண்டிக் கொண்டான்.

''முன்பு குருபத்தினியிடம் தகாத முறையில் நடந்து கொண்ட சந்திரனுக்கு இந்தத் தண்டனை வேண்டியதுதான்'' என்று நான்முகன் எண்ணினார். இருந்தாலும் சந்திரன் படும் வேதனை தாங்காமல் ஓர் உபாயம் செய்தார். பிற தேவர்களும் அதை ஏற்றுக் கொண்டார்கள்.

பிரபாஸப்பட்டணம் போய் ஒரு தீர்த்தத்தை உருவாக்கி, அங்கு பார்த்திப லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து ஆறு மாதம் பூஜை செய்யும்படி எல்லோரும் சந்திரனிடம் கூறினார்கள். சந்திரனும் அவர்கள் கூறியபடியே பூஜை செய்து வந்தான். ம்ருத்யுஞ்ஜய மந்திரத்தைப் பத்து கோடிமுறை உருவேற்றினான்.

இந்திரனின் பூஜையையும் மந்திர உருவேற்றத்தையும் கண்டு மகிழ்ந்த சிவபெருமான் அவன்முன் தோன்றி இப்

படிக் கூறினார். "பெரியோரின் சொல்லை நீ கேட்காமல் அலட்சியம் செய்தாய்; மனைவிகளுக்குள் பேதம் காட்டியது தர்மத்தை மீறிய செயல். ஆதலால் அந்தச் சாபத்தை முழுவதுமாகப் போக்க முடியாது."

"பதினைந்து நாள் உன் கலைகள் வளர்ந்தும் பதினைந்து நாள் உன் கலைகள் தேய்ந்தும் விளங்குவாயாக!" என்று சிவபெருமான் வரம் அளித்தார்.

சந்திரன் (ஸோமன்) பூஜித்த லிங்கமானதால் ஸோமநாதர் என்ற திருநாமம் ஏற்பட்டது. ஸோமவார (திங்கட் கிழமை) அமாவாசையில் இந்த லிங்கத்தைத் தரிசிப்பது மிகவும் சிறந்தது. சந்திரன் நிர்மாணித்த சந்திர குண்டம் என்ற தீர்த்தம் சகல ரோகங்களையும் போக்கவல்லது.

ஸோமலிங்கம் நரோ த்ருஷ்ட்வா
ஸர்வபாபாத் ப்ரமுச்யதே |
லப்த்வா பலம் மநோபீஷ்டம்
ம்ருதஸ் ஸ்வர்கம் ஸமீஹதே ||

ஸோமநாதரைத் தரிசித்தாலே சகல பாபங்களும் விலகுகின்றன. விருப்பங்கள் நிறைவெய்துகின்றன; சிறப்புக்குப் பின் சொர்க்கத்தை அடையும் தகுதியும் வரும்.

இந்தத் தலத்தைத் தரிசிக்கச் சௌகரியமான போக்குவரத்து வசதியும் தங்கும் வசதிகளும் இருக்கின்றன.

# 2. மல்லிகார்ஜுனர்

சிவபெருமானை அன்றாடம் தரிசித்தால் அன்றைய பாவம் அன்றோடு போய்விடும் என்று சிவ புராணத்தில் கூறியிருக்கிறது. ''சிவ சிவ என்போருக்கு வினை போகுமே'' என்றும் அடியார்கள் சொல்வார்கள்.

பரமசிவனுக்கு நிறைய நீர் விட்டு அபிஷேகம் செய்து அருகம் புல்லைச் சார்த்தினால் போதும். மகிழ்ந்து போய் அடியார்கள் கேட்கும் வரங்களைக் கொடுப்பான். அதனால் ஆசுதோஷீ என்று பரமேசுவரனைக் கூறுவார்கள்.

இரண்டாவது ஜோதிர் லிங்கத்தலம் மல்லிகார்ஜுனம். இது ஆந்திராவில் உள்ளது. அர்ச்சுனன் பூஜை செய்த தலமாதலால் இப்பெயர் பெற்றது. சமயக் குரவர்கள் மூவரும் இந்தத் தலத்தைப் பாராட்டிப் பாடியிருக்கிறார்கள்:

சுடுமணி யுமிழ நாகம் சூழ்தர வரைக் கசைத்தான்
இடுமணி எழிலானை ஏறலன் எருதேறி
விடமணி மிடறுடையான் மேவிய நெடுங்கோட்டுப்
படுமனி விடுசுடரார் பருப்பதம் பரவுதுமே

''ரத்தினத்தை உமிழும் நாகத்தை அரையில் கச்சையாகக் கட்டி, ரிஷபத்தின் மேல் ஏறி, ஆலகால நஞ்சை மிடற்றில் நிறுத்திக் கொண்ட பரமசிவனான பருப்பத நாதனைப் பரவினால் பேறு பெறலாமே'' என்பது இதன் பொருள். திருஞான சம்பந்தப் பெருமான் பாடிய திருப் பருப்பதப்பாடல் இது.

'கன்றினார் புரங்கள் மூன்றும்' என்ற பதிகத்தால் அப்பர் சுவாமிகளும், 'மானும் மறையினரும்' என்ற தேவாரப்

பதிகத்தால் சுந்தரமூர்த்தி சுவாமிகளும் இந்த ஜோதிர்லிங்கத்தைப் பாடியிருக்கிறார்கள்.

தேவாரப் பாடங்களில் இந்தத் தலம் திருப்பருப்பதம் என்று அழைக்கப்பட்டிருக்கிறது. சிலாத புத்திரராகிய சைலாதி என்ற நந்திதேவர் சிவனை வழிபட்டு அருள் பெற்ற தலம் இது. நந்திதேவரே பர்வத வடிவமாக இங்கே எழுந்தருளிப் பரமசிவனைத் தாங்கிக் கொண்டிருப்பதாக புராண வரலாறு கூறுகிறது.



மல்லிகார்ஜுனன்

த்யான சுலோகம்

ஸ்ரீசைஸ்ல ஸ்ருங்கே விபுதாதிஸங்கே
துலாத்ரி துங்கே (அ)பிமுதா வஸந்தம் |
தமர்ஜுனம் மல்லிக பூர்வமேகம்
நமாமி ஸம்ஸார ஸமுத்ர ஸேதும் ||

ஜோதிர்லிங்கத்தின் திருநாமம் மல்லிகார்ஜுனர். அம்பிகையின் திருநாமம் பிரமராம்பிகை. ஆதிசங்கரர் இந்தத் தலத்தைப் பாராட்டிச் சுலோகம் இயற்றியிருக்கிறார். அது 'ஸந்த்யாரம்ப விஜ்ரும்பிதம்' என்ற சுலோகம். சிவானந்தலஹரியில் ஐம்பதாவது சுலோகம் இது. மல்லிகார்ஜுனரைத் தரிசித்தால் வரும் பயனைப் பற்றி இதில் கூறியுள்ளார். பிரமராம்பாஷ்டகம் என்ற துதி நூலில் அம்பிகையைப் புகழ்ந்து பாடியுள்ளனர்.

மகாபாரதம் வனபர்வத்தில் இந்தத் தலத்தைப் பற்றிய குறிப்பு காண்கிறது:

ஸ்ரீசைலே மஹாதேவோ
தேவ்யா ஸஹ மஹாத்யுதி: |
நிவஸத் பரமப்ரீதோ
ப்ரஹ்மா ச த்ரிதசை: ஸஹ ||

தத்ர தேவஹ்ரதே ஸ்நாத்வா
ஶுசி: ப்ரயத மானஸ: |
அஶ்வமேத மவாப்னோதி
குலம் சைவ ஸமுத்தரேத் ||

மல்லிகார்ஜுனரைத் தரிசித்தால் பிறவி-வினைகள் அறுவதுடன் அசுவமேதயாகம் செய்த பலன் கிடைக்கும் என்று கூறியிருக்கிறது இதில்.

ஏசு கிறிஸ்து பிறப்பதற்கு முன்பே, இந்த மலையுச்சியில் புத்தசங்கம் அமைந்திருந்தது என்று சீனநாட்டு யாத்திரிகர்கள், தங்கள் பிரயாணக் குறிப்பில் குறிப்பிட்டிருக்கிறார்கள்.

குண்டக்கல்—குண்டூர் ரெயில் பாதையில் நந்தியால் ரெயில் நிலையத்திலிருந்து எழுபதுமைல் தொலைவில் இது

அமைந்திருக்கிறது. வடக்கிலிருந்து வருவோர் ஹைதரா பாத்திலிருந்து ரெயிலில் கர்நூல் சென்று அங்கிருந்து சாலை வழியாக ஆத்மகோர் என்ற ஊரை அடைந்து திருப்பருப் பதம் சென்றடையலாம். கடப்பையிலிருந்தும் இந்தத் தலத்துக்குப் போகலாம்.

கிருஷ்ணா நதி மலையடிவாரத்தில் செல்கிறது. இந்த ஆறு, மலையின் அடிப்பகுதியில் பாய்ந்து செல்வதால் இதைப் பாதாள கங்கை என்று சொல்லுகிறார்கள். ஆற்றின் கரை யோரம் எல்லாம் மலைப்பாறைகள் தாம். ஆனால் நீரா டும் துறையை நன்றாகச் செப்பனிட்டிருக்கிறார்கள்.

இந்தக் கோயில் இன்று நல்ல நிலையில் நிர்வகிக்கப் பட்டு வருகிறது. ஆலயத்துள் கல்வெட்டுக்கள் பல உள்ளன. விஜய நகர அரசர்களில் கிருஷ்ண தேவராயரும், சாளுக் கிய அரசர்களில் சிலரும் இந்த ஆலயத்தை அவ்வப்போது செப்பனிட்டு வந்திருக்கின்றனர். யாத்திரிகர்கள் சென்று தங்கவும் இறைவனைத் தரிசிக்கவும் பல வசதிகள் உள்ளன

அழகிய சிற்பங்கள் வெளிப்புறச் சுற்றுச் சுவரில் உள் ளன. வடக்கு கிழக்கு தெற்கு ஆகிய மூன்று திக்குகளிலும் பெரிய வாயில்கள் உள்ளன. கிழக்குப் பக்கந்தான் பிர தான வாயில். அம்பிகையின் ஆலயம் மிகச் சிறியதாய் மல்லிகார்ஜுனருக்கு மேற்கே இருக்கிறது.

இந்தக் கீழ்வாயிலுக்குச் சற்று வடக்கே ஒரு சிவன்கோ யில் இருக்கிறது. அதைப் புராதன மல்லிகார்ஜுனர் என்று அழைக்கிறார்கள்.

இந்தத் தலத்திலுள்ள பிரதான லிங்கம் இருபத்தைந்து பிரிவுகள் கொண்டு காட்சியளிக்கிறது. ஒவ்வொரு பிரிவி லும் நாற்பது லிங்கங்கள் உள்ளன. இந்த முறையில் இது ஸகஸ்ர லிங்கம் என்று அழைக்கப்படுகிறது.

லிங்கத்தின் மேல், மூன்று தலையுடைய நாகம் குடை பிடித்திருப்பது போன்ற அமைப்பு காண்கிறது. அடியவர்கள், தாங்களே குளித்து முடித்துச் சுத்தமாக லிங்கத்தைத் தொட்டுப் பூஜை செய்யலாம்.

நந்தவனம், திருக்குளம், வெள்ளி மேடை, பட்டாடைகள், தங்குமிடங்கள், திருமண மண்டபங்கள் எல்லாம் உள்ளன. செவ்வனே பராமரிக்கப்பட்டும் வருகின்றன.

இந்தத் தலத்தைப் பற்றி மூன்று விதமான புராண வரலாறுகள் காணப்படுகின்றன.

## புராண வரலாறு

கைலையங்கிரியில் பார்வதியும் பரமசிவனும் அமர்ந்து தங்கள் பிள்ளைகளான முருகனும் விநாயகரும் விளையாடிக் கொண்டிருப்பதைக் கண்டு மகிழ்ந்தனர். பிள்ளைப் பருவம் கடந்து வாலிபத்தை எட்டியுள்ள பிள்ளைகளுக்குத் திருமணம் செய்து வைக்க வேண்டும் என்று பார்வதி எண்ணினாள்.

தன் விருப்பத்தை ஈசுவரனிடம் கூறினாள். பிள்ளைகளின் திருமணத்தைப்பற்றிப் பார்வதி பரமேசுவரன் பேசிக் கொண்டிருக்கையிலே விநாயகர் பெற்றோரின் அருகில் வந்தார். மிகவும் சுவாரசியமாய்ப் பேசிக் கொண்டிருப்பதைக் கேட்டார். அந்தச் சமயத்தில் முருகனும் அம்மையப்பனின் அருகில் வந்தான்.

தங்கள் திருமணத்தைப் பற்றிப் பெற்றோர் பேசிக் கொண்டிருப்பதைக் கண்டதும் ஒவ்வொருவரும் தனக்கே முதலில் மணமுடிக்க வேண்டும் என்று வற்புறுத்தினர். இந்தச் சிக்கலைத் தீர்க்கப் பரமசிவன் ஒரு யோசனை செய்தார்.

ஒரு நிபந்தனை விதித்தார். இந்த பூவுலகத்தை யார் முதலில் சுற்றி வருகிறார்களோ அவர்களுக்கு முதலில் திருமணம் செய்து வைக்கப்படும் என்று திருவாய் மலர்ந்தார். அவ்வளவுதான் இருவரும் புறப்பட்டார்கள் ஆனால்...

பழத்துக்காக முன்பே, பூவுலகைச் சுற்றப் போன முருகன் ஏமாந்து போனான், அல்லவா? விநாயகர், பார்வதி பரமேசுவரர்களை வலம்வந்து நமஸ்கரித்தே, பூவுலகைச் சுற்றி வந்து விட்டதாகக் கூறிப் பழத்தை வாங்கிக் கொண்டு விட்டார்.

இதைக் கண்டு கோபமுற்ற முருகன், துறவுக் கோலத்தில், கோவணாண்டியாக பழனி மலைமேல் போய் அமர்ந்தான். இதே போல்தான் இப்போதும் நடந்தது.

மயில் வாகனத்தில் ஏறிக் ககனத்தைச் சுற்றிப் பறந்தான் முருகன். ஆனால் விநாயகர் தாய் தந்தையரை ஒரு முறை வலம் வந்து நமஸ்கரித்து, "பிரபஞ்சத்தின் சொரூபமே நீங்கள்தாம், உங்களை வலம் வந்தாலே, பூவுலகைச் சுற்றிய பலன் தான்" என்று கூறி வணங்கி நின்றார் விநாயகர்.

சிவபெருமானும், விநாயகரின் ஞானத்தை அறிந்து மகிழ்ந்து விசுவரூபன் என்ற தேவனின் பெண்களான ஸித்தி புத்தி என்ற இருவரையும் அவருக்கு மணம் முடித்து வைத்தார்.

தென்நாட்டில்தான் விநாயகர் பிரம்மசாரி; வடநாட்டில் விநாயகர் தம் மனைவிமாருடன் காட்சியளிப்பார். ஸித்தி-புத்தி என்ற இரு மனைவியாருடன் காட்சியளிக்கும் விக்நேசுவரர் திருக்கோயில்கள் சிலவும் இங்கே உள்ளன.

உண்மையாகவே உலகைச் சுற்றி வந்த முருகன், பாதி

வழியிலேயே, நாரதர் மூலம் நடந்ததை அறிந்தான். தாய் தந்தையர் மேல் சினந்து, நேராகக் கிரௌஞ்ச மலையில் பிரம்மசாரியாகவே கோயில் கொண்டார். குமார பிரம்ம சாரி என்று இந்த முருகனை அழைப்பார்கள்.

முருகனுக்கு நடந்ததைக் கூறிய நாரதர், நேராகக் கை லாசம் வந்தார். பார்வதி-பரமசிவனிடம் முருகன் கோ பித்துக் கொண்டு கிரௌஞ்ச மலையில் கோயில் கொண்ட தையும் கூறினார். அதைக் கேட்டு பார்வதி மிகவும் வருத் தத்துடன் முருகனைத் தேடி அந்த மலைக்குச் சென்றாள்.

தன்னைச் சமாதானப்படுத்த, பெற்றோர் வருகிறார் கள் என்பதை அறிந்த முருகன், அங்கிருந்து வேறொரு மலைக்குச் செல்லப் புறப்பட்டார். ஆனால் நாரதரும் பிற தேவர்களும் வற்புறுத்தியதன் பேரில் கோபம் தணிந்து அங் கேயே கோயில் கொள்ளச் சம்மதித்தார். மல்லிகார் ஜுனர் மலையிலிருந்து முருகன் தங்கியுள்ள மலைக்கோ யில் மூன்று கல் தொலைவில் உள்ளது.

பார்வதியும்—பரமசிவனும் தங்கிய இடமே திருப்பருப் பதம் என்ற தலம். முருகனின் கோபம் தணிய, பார்வதி யும் பரமசிவனும் அவரைப் போய்ப் பார்த்து வருகிறார்கள் என்பது ஐதிகம். அமாவாசைத் திங்களில் பரமசிவனும், பௌர்ணமி நாட்களில் அம்பிகையும் போய்ப் பிள்ளையைக் கண்டு வருகின்றனர்.

ஸ்ரீசைலத்தில் இன்னொரு வரலாறும் வழங்குகிறது. கிருஷ்ணா நதிக்கரையில் வெகு காலத்துக்கு முன்பு ஒரு ராஜ்யம் இருந்தது; சந்திரகுப்தம் என்று பேர். அந்த நாட் டை ஆண்டுவந்த மன்னனுக்குச் சந்திரவதி என்ற ராஜ குமாரி ஒருத்தி இருந்தாள். அவளுக்கு வாழ்வில் வயிப்பு

ஏற்படவில்லை. சுகபோகமும் அரசவாழ்வும் அவனைக் கவரவில்லை.

இளம் வயதிலேயே அவள் மனம் பக்தியில் அதிக நாட்டம் கொண்டிருந்தது. அரண்மனை வாழ்வு அவள் மனப் போக்குக்கு ஏற்ப அமையாததால், ஒருநாள் யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் ஸ்ரீசைலத்தை அடைந்தாள்.

அங்கே இறை.வழிபாடு செய்து கொண்டு வாழ்ந்தாள். என்ன இருந்தாலும் அவள் அரசகுமாரி அல்லவா? அதனுல் அரசன் அவளுடன் பல பசுக்களையும் உதவிக்குத் தாதியர் களையும் அனுப்பி வைத்தான்.

சில நாட்கள் கடந்ததும், மேயச் சென்ற பசுக்கள் மாலையில் வீட்டுக்கு வந்ததும் சரியானபடி பால் கறப்ப தில்லை. ஒருநாள், இரண்டு நாள் அல்ல. இப்படிப் பல நாட்கள் நடந்ததும், அரசகுமாரி மாடுகளை ஓட்டிச் செல் லும் ஆளைக் கூப்பிட்டு விசாரித்தாள்.

மேய்ச்சல் காட்டில் ஓரிடத்தில் காணப்படும் சிவலிங் கத்தின் மேல் பசுக்கள் பால்சொரிகின்றதைக் கண்டதும் அந்த ஆள் கூறினான். முதலில் அந்த ஆள் கூறியதை அரச குமாரி நம்பவில்லை. "தினம் அப்படிப் பசுக்கள் செய் யுமா? இடையன் பாலைக் கறந்து விற்று விடுகிறான்" என்றே அரசகுமாரி எண்ணினாள்.

ஒருநாள் இரவு ராஜகுமாரி ஒரு கனவு கண்டாள். மேய்ச்சல் காட்டில் காணப்படும் லிங்கத்திலிருந்து சிவபெரு மான் தோன்றினார். "இந்த இளம் வயதில் உலக வாழ் வைத் துறந்த உன் பூஜையே எனக்கு உகந்தது. மல்லிகை மலரால் பூஜை செய்வாயாக!" என்று பெருமான் கூறி மறைந்தார்.

அது முதல் அரசகுமாரி, அன்றாடம் அந்த இடத்துக்குப் போய், பூமிமட்டத்திலிருந்து கொஞ்சம் மேலே தெரியும் சிவலிங்கத்தைப் பூசித்து வரத்தொடங்கினாள். அன்றாடம் மல்லிகை மலரால் பூசித்து வந்ததால் மல்லிகார்ஜுனர் என்ற திருநாமம் அமைந்தது. இந்தக் கதையைக் கோயில் உட்பிராகாரத்துள் சித்திரங்களாகத் தீட்டியிருக்கிறார்கள்.

மற்றொரு கதையின்படி, வேடனின் உருவில் வந்த சிவபெருமான் செஞ்சு வம்சத்தைச் சேர்ந்த ஒரு பெண்ணைக் கண்டு மணந்தார். இதற்கும் பார்வதி சாபமேற்று அந்தக் குலத்தில் பிறந்தாராம். சிவபெருமான் வாக்களித்தபடி அவளை மணந்ததாகவும் வரலாறு இருக்கிறது. இத்தனையும் மற்றொரு சுவரில் சித்திரங்களாக உள்ளன.

ஆதிக் குடிகளாகிய செஞ்சுக்கள் இந்தக் கோயில் நிர்வாகத்தில் இன்று பங்கு ஏற்கின்றனர். மல்லிகார்ஜுனரைச் செஞ்சுமல்லையா என்று அழைப்பார்கள்.

திருப்பருப்பதத்தின் சிகரத்தைத் தூரத்தினின்றும் தரிசித்தாலே பிறவியினின்று விலக முடியும் என்பது அடியார் அனுபவம். லிங்காயத்துகள் என்ற சிவமதப் பிரிவினர் இந்தத் தலத்தை 'நிலவுலகக்கைலாயம்' என்றே போற்றி வணங்குகின்றனர்.

இந்தத் தலத்தைப் பற்றியச் சுலோகம்;

அத। பரம் ப்ரவக்ஷ்யாமி
மல்லிகார்ஜுந ஸம்பவம் ।
ஸர்வ பாபை: ப்ரமுச்யதே ॥

மல்லிகார்ஜுனர் ஜோதிர்லிங்கத்தின் வரலாற்றை

ஒருவன் கேட்டாலே வாழ்க்கைப் பந்தங்கள் எல்லாம் விலகுகின்றன. ஸர்வேசுவரனின் மெய்யடியானாக மாறு கிறான்.

பாலில் எல்லாம் வெண்ணெய் இருக்கிறது என்பது உண்மை. ஆனால் அதைக் காய்ச்சி, புரைகுத்தி, கடைந் தால் தான் வெண்ணெய் திரண்டு வருகிறது. அதைப் போல் பூவுலகம் முழுவதும் ஈசுவரனின் திருவருள் பரவி யிருந்தாலும் உண்மை அன்பர்களின் பக்தியை மெச்சி, சில தலங்களில் இறைவன் சிறப்பாகக் கோயில் கொண் டிருக்கிறான்.

ஜோதிச் சொரூபம் இறைவன் என்ற கருத்தின் அடிப் படையில், ஜோதிர் லிங்கங்களாகப் பன்னிரண்டு திருத்த லங்களில் கோயில் கொண்டிருக்கிறான். இந்தியாவின் பல பாகங்களில் இந்தத் தலங்கள் பன்னிரண்டும் பரவிக் கிடக்கின்றன.

ஸ்ரீசைலத்து மல்லிகார்ஜுனரின் தலம் பாரதத்தில் மத்திய பாகமாக விளங்குகிறது. நதியும் காடும் சூழ்ந்து இயற்கையெழில் மிகுந்த ரம்மியமான சூழலில் இந்தத் திருத்தலம் இருக்கிறது. மனதுக்குச் சாந்தியையும் பிற வாயாக்கையையும் அளிக்க வல்ல தெய்வத் திருத்தலம் இது.

# 4. மகாகாளீசுவரர்

மத்தியப் பிரதேச மாநிலத்தில் உள்ள உஜ்ஜைனி உலகப் பிரசித்தி பெற்ற தலம். உஞ்ஞை, உஞ்சேனை என்ற பெயராலும் அழைப்பதுண்டு. மஹாகவி காளிதாசன் உலவிய நகரம் கி. மு. ஆறாம் நூற்றாண்டு முதல் நான்காம் நூற்றாண்டு வரை அக்காலத்தில் அவந்தீ என அழைக்கப் பெற்ற நாட்டின் தலை நகரமாகத் திகழ்ந்தது.

தான் வாழ்ந்த உஜ்ஜைனியைக் காளிதாசன் மறவாது தன் காவிய்மாகிய மேக சந்தேசத்தில் இடம் பெறச் செய்கிறான்; "ஏ மேகமே! விந்நிய மலையிலிருந்து வடக்கு நோக்கிச் செல்லும் உனக்கு நேர் வழியில் அமையாமல் சற்று விலகி இருப்பினும் அவந்தீ தேசத்தின் உஜ்ஜைனியைச் சென்று காண்பாய்."

"அது அரசர்கள் பலர் புகழோடு ஆண்ட பொன்னுலகம். வற்றாத வெள்ளப் பெருக்கையுடைய ஸிப்ரா நதி அந்நகரை மாலை போல் அலங்கரிக்கும், குளிர் காற்றுக்கு அங்கே குறைவில்லை. எழில் மேகமே! உஜ்ஜைனியின் பேரழகைக் கண்டு மகிழ ஆயிரம்கண் படைத்த உன் கணவனான இந்திரனாலும் இயலாது."

,,அந்நகரத்தின் கடைத்தெரு, கடல்போல் பண்டங்கள் பல பாங்குடன் மிளிரும் வகையில் பொலிவாலும் பொருளாலும் புகழ்படைத்தது. சுற்றிலும் அரண்கள்: ரத, கஜ, துரக பதாதிகள்! பகைவர் எளிதில் உள்ளே புக இயலாத கோட்டை; அந்நகரில் ஏழையைக் காண்பது அரிது! எல்லோரும் குபேரர்களே! எங்கு பார்த்தாலும் யாக வேள்விகளே! அகிலும் சந்தனமும் ஒவ்வோரர் இல்லத்திலும்

கமழும். வானளாவி உன்னோடு போட்டி போடும்! அது கண்டு மழை வந்து விட்டதோ என மயில்கள் தோகை விரித்து ஆடும்.

குயில்கள் யாழ் மீட்ட, வண்டுகள் சுருதி கூட்டும். அங்கே மஹாகாளம் என்னும் புனிதக் கோயில் உள்ளது. அங்கு எழுந்தருளியிருக்கும் எம்பெருமானைத் தவறாமல் தரிசனம் செய்து கொண்டு செல்" என மேகத்திடம் கூறுவ தாக அமைந்த கவிதை வரிகள் அற்புதமானவை.

மோட்சத்தைத் தரும் ஏழு நகரங்களில் உஜ்ஜைனியும் ஒன்று. அயோத்தி, மதுரா, ஹரித்வாரம், காசி, காஞ்சி, அவந்திகை, துவாரகை என்பனவற்றுள் அவந்திகையே உஜ்ஜைனி ஆகும்.

காசி, மாயாபுரி, அவந்தி, காஞ்சி, மற்
றோசைகொ ளயோத்தி, வன்துரை யொப்பறு
மேசிலா மதுரையென் றினிக்கும் ஏழ்பதி
மாசறு முத்தியை வழங்கும் என்பவே

(காசி காண்டம்)

பண்டைக் காலத்தே அமராவதி, அவந்திகை, பத்மா வதி, சிவபுரி, விசாலா என்று பல பெயர்களால் அழைக்கப் பெற்ற இந்நகரம் ஜைன மதத் தாக்கத்தின்போது பெயர் மாற்றம் பெற்றது.

ஜைன சமயத்தைச் சார்ந்த சுதன்வா என்ற மன்ன னால் உஜ்ஜைனி என்ற பெயர் சூட்டப்பெற்றது. உத் + ஜைன = ஜைன சமயத்தை உச்ச நிலைக்குக் கொண்டு வந்த நகரம் என்பது பொருள்.

வேத காலத்திலேயே இந்நகர் பெயரும் புகழும் பெற்று விளங்கியது. விக்ரமாதித்தன் காலத்தில் மாள

வத்தின் தலைநகராயிருந்தது. சகாப்தத்தைத் தோற்று வித்த சாலிவாஹனன் வாழ்ந்த இடமும் இதுவே.

அசோகரின் தந்தையின் ஆட்சிக் காலத்திலும் இதுவே தலைநகரமாக இருந்தது. அல்லாவுதீன்கில்ஜியின் ஆட்சியிலும் அப்படியே. பின் குஜராத்துடன் சேர்க்கப் பெற்றது. அக்பரின் காலத்தில் இதனை டில்லியுடன் இணைத்துக் கொண்டார்.

புலி மன்னர்கள் புகழ்பாடும் கோட்டையும் மாளிகைகளும் இந்நகருக்கு இன்றும் பொலிவு கூட்டுவன. அதே போல் காலத்தால் அழியாத காவியம் படைத்த பர்த்ருஹரி, காளிதாசர் ஆகியோரின் கால்பட்ட புண்ணிய பூமி இது.

விக்கிரமாதித்தனுக்கு வெற்றியைத் தந்த காளிகோயிலும் காளிதாசனின் நாவில் கவிமழை பொழியச் செய்த காளிகோவிலும் நகரத்தின் உள்ளேயும் நகரத்தை விட்டு ஒரு மைல் தள்ளி வெளியேயும் அமைந்துள்ளன.

மருகல் உறைவாய் மாகாளத்தாய் மதியம்சடையானே
அருகல் பிணிநின் அடியார் மேல் அகலூ அருளாயே
கருகல் குரலாய் வெண்ணிக்கரும்பே கானூர்க்கட்டியே
பருகப் பணியாய் அடியார்க்குன்னைப் பவளப்
படியானே

என்று மாகாளத்தீசனை நினைத்துக் கொண்டு பாடி மகிழ்கிறார் சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

சம்ஸ்கிருத நூல்களிலும் சிலப்பதிகாரம் யசோதர காவியம் பெருங்கதை முதலிய தமிழ் இலக்கியங்களிலும் உஜ்ஜைனி போற்றிப் பேசப்படுகிறது. இங்கு நீர்விழா நிகழ்வதை, பெருகதை சிறப்பித்துப் பாடும். உதயணன்

வாஸவத்தையைக் கவர்ந்து சென்றதும் இந்நகரத்திலி ருந்தேயாம்.

கலையும் திருவும் மேம்பட்டு அகநகர் புறநகர் என இரு பகுதிகளாய் விளங்கியதை அக்காவியம் சுட்டிக் காட்டு வதோடு அக்காலத்தே நகர மாந்தர் முருகனின் வழிபாட் டில் ஈடுபட்டிருப்பதையும் உணர்த்துகிறது.

ஓவியங்களும் சிற்பங்களும் இன்னும் உஜ்ஜைனியை அலங்கரிக்கின்றன. அகமதாபாத்திலிருந்து 200 மைல் கிழக்கே இந்நகர் அமைந்துள்ளது. இந்தூரில் ரயில் ஏறி, 'சந்திராவதிகஞ்சு' சென்று வேறு ரயில் மாறி அங்கிருந்து 15 மைலில் உள்ள உஜ்ஜைனியை அடையலாம். போபாலி லிருந்தும் போகலாம்.

"முக்தி நிலை சித்திக்க வேண்டுமெனில் உஜ்ஜைனி மாகாளியைத் துதித்தால் போதும். அவள் துணையாயி ருப்பாள்" என ஒரு கவி கருத்துரைக்கிறார்.

"உஜ்ஜைனி நித்யகல்யாணி
ஓம் சக்தி ஓம் சக்தி ஓம் சக்தி"

எனப் பாடி மகிழ்கிறார் அமரகவி பாரதியார்.

கார்த்திகை மாதத்தின் பௌர்ணமி நாளைப் பெரு விழா நாளாக இவ்வூரார் கொண்டாடி மகிழ்கின்றனர். அப்போது மஹாகவி காளிதாசரையும் நினைத்துப் போற்று கின்றனர். நகரின் அருகே கண்ணனுக்கு முன் பிறந்து காளிதாசன் வழிபட்ட காளி ரிணமுக்தேசுவரர், அசிலேசு வரர், ஓங்காரேசுவரர், மங்களேசுவரர், பராகணபதி, ஹரசக்திமாதா கோயில்கள் சென்று வழிபட வேண்டிய வை. கண்ண பரமாத்மாவின் குருவாகக் கருதப்பெறும் ஸாந்தீபனி முனிவரின் ஆசிரமம் அமைதியின் இருப்பிடம்.

பர்த்ருஹரி, அடங்கிய குகையும் காணவேண்டிய முக்கியத்துவம் வாய்ந்தது. இங்குள்ள ஸிப்ராநதி சிறியதெனினும் புனிதத்தால் உயர்ந்தது. ஆலயத்திற்கு அருகில் புஷ்கரிணிப் பொய்கையும் கோடி தீர்த்தமெனும் குளமும் உள்ளன.

இத்திருக்குளத்தின் நீர் அடிக்கடி நிறம் மாறக் கூடிய அதிசய சக்தி வாய்ந்தது. நதிக்கரையில் அமைதியான சூழ்நிலையில் உள்ள பைரவரின் கோயிலும் பார்க்கத் தக்கது. பல தரும சாலைகளும் திருமடங்களும் பக்தர்களை வரவேற்கின்றன.



## புராண வரலாறு

அவந்தி நாட்டில் வேதப்பிரியன் என்ற அந்தணரும், அவரது நான்கு மைந்தர்களான தேவப்ரியன், மேதன், கவிரதன், தருமாவதி ஆகியோரும் சிவபெருமானிடத்தில் அளவிலா ஈடுபாடுடையவர்கள். இவர்களுடைய தவவலிமையைக் குலைக்க ரத்னமாலா எனும் மலையில் வாழ்ந்த துரஷணன் எனும் அரக்கன் அடிக்கடி இடையூறு செய்து வந்தான்.

அவன் பிரமனிடம் வரம் பெற்றவன். தொல்லைகள் எல்லை கடந்த போது எல்லா அந்தணர்களும் கூடி அசுரனை அழிக்கக் கடுந்தவம் மேற்கொண்டனர்.

தூஷணன் தன் பரிவாரங்களோடு அந்தணர்களை அழிக்க வந்தான். அப்போது வேதப்பிரியர் குளத்தில் மண்ணெடுத்துப் பார்த்திவ லிங்கத்தை உருவாக்கி, பூஜைக்கு ஆயத்தம் செய்து கொண்டிருந்தார்.

தூஷணனின் இறுதிக் காலம் நெருங்கி விட்டதால் பூஜைப் பொருள்களைச் சிதைக்கத் தொடங்கினான். அது போது, குளத்திலிருந்து மஹாகாளீசுவரர் தோன்றி துஷ்டநிக்ரஹம் செய்து, தன்னை ஒரு மனதுடன் வழிபடு வோர்க்கு அருள் புரிந்தார். தன் பக்தர்களின் வேண்டு கோளுக்கிணங்க அங்கே ஜோதிர்லிங்கமாய் என்றும் விளங் குவதாக வாக்களித்தார்.



மகாகாளீசுவரர்

த்யானச் சுலோகம்

அவந்திகாயாம் விஹிதாவதாரம்
முக்தி ப்ரதானாய ச ஸஜ்ஜனானாம் |
அகாலம்ருத்யோ: பரிரக்ஷணார்த்தம்
வந்தே மஹா கால மஹாஸுரேசம் ||

தனக்குத் துணை லிங்கமாக துர்தேசலிங்கத்திலும்

ஆவிர்ப்பவித்தார். ஜோதிமயமாக நீரில் தோன்றி என்றும் கரையாது அழியாது விளங்கும் ஜோதிலிங்கமாக உஜ்ஜைனீ ஜோதிர் லிங்கம் திகழ்கிறது. நீரும் நெருப்பும் கலந்தாலும் குணபேதமின்றி சிவரூபம் பஞ்சமபூத சம்பந்தத்திற்கு உட்படாததாய் ஒளி வீசுகிறது.

கண்ணால் காண இயலாத பேரொளி தன் ஆற்றலைச் சுருக்கிக் கொண்டு அன்பரின் ஓர் அடையாளச் சின்னமாய்க் காட்சியளிப்பதே லிங்கதத்துவம். அருவத்திற்கும் உருவத்திற்கும் இடைப்பட்ட ஒரு நிலையில் மனதைச் சிவத்திடம் ஒரு முகப்படுத்துவது லிங்கத்தின் அமைப்புமுறை.

உஜ்ஜைனீ ஜோதிர்லிங்க ஆலயம் ஐந்து அடுக்குகளைக் கொண்டது. பூமி மட்டத்திற்குக் கீழாக உள்ள மஹாகாளலிங்க மூர்த்தி சிறியதெனினும் கீர்த்தி பெரிது. மேல் தளத்தில் உள்ள் லிங்கம் 'ஓங்காரேசுவரர்' என்று அழைக்கப்பெறுகிறது.

ஒரு முறை பூஜைக்குப் பயன்படுத்திய பொருள்கள் 'நிர்மால்யம்' எனப் பெயர் பெறுவன. இவற்றை மறுபடியும் உபயோகிக்கும் பழக்கம் எங்கும் இல்லை. ஆனால் இங்கு மட்டும் மீண்டும் பயன்படுத்தும் முறை அனுஷ்டிக்கப்படுவது வியப்பாக உள்ளது.

'மஹாகாளவனம்' என்று இந்தத் தலத்தை ஸ்கந்த புராணம் குறிப்பிடுகிறது. ஸிப்ரா நதியின் தீர்த்தம் பாபத்தை நீக்க வல்லது என அக்னி புராணம் கூறுகிறது.

இப்புனித நதியில் நீராடி, மஹாகாளேசுவரரை வணங்கும் பாக்கியம் பெற்றவர்கள் தம்மிடம் உள்ள அசுர குணங்கள் மறைந்து தேவ குணங்கள் நிரம்பப் பெறுகின்றனர் என்பது அநுபவ உண்மை. பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை கும்பமேளா உற்சவம் இப்பகுதி மக்களுக்கு வாய்ந்த நற்பேறாகும்.

# 4. ஓங்காரீசுவரர்

யத பீஷ்டம் யலம் தச்ச
ப்ராப்நுயாத் நாத்ர ஸம்ஶய:
ஏதத்தே ஸர்வமாக்யாதம்
ஓங்கார ப்ரயவேபலம்

"ஓங்கார ஜோதிர்லிங்கம் தோன்றியதன் வரலாறைக் கேட்பவர்களுக்கும் படிப்பவர்களுக்கும் பலனுண்டு. அவர்களின் வாழ்வில் எண்ணியது பலிக்கும். எல்லாச் செல்வங்களும் பெருகும். அப்பரம்பொருளை லிங்க வடிவில் நேரில் சென்று தரிசித்தால் மோட்சமே கிடைக்கும் என்பது சுலோகத்தின் பொருள்.

ஓங்காரம் என்பது பரம்பொருளின் ப்ரணவச் சொருபத்தை ஒலி வடிவில் உணர்த்துவதாகும். வேதங்களில் 'ஓம்' என்ற சொல் பொதுவாகக் காணப்பட்டாலும் யஜுர் வேதத்தில் தான் ப்ரணவத்தின் விளக்கம் உள்ளது.

சிவபெருமானின் ருத்ராம்சம் வில்லையும் அம்பையும் தோளில் சுமந்து நிற்பது. ருத்ரனே லிங்கவடிவு பெறுகிறார். அவர் வில்லினின்று நாணைத் தொடுக்கும் பொழுது தோன்றும் நாதமே ஓம் எனும் ப்ரணவமாக மாறுகிறது. ருத்ர அத்யாயத்திற்கு விளக்க உரை எழுதுகின்ற விஷ்ணு சூரி அவர்கள்,

"பினாகம் ப்ரணவாத்மகம்
தனு: கரேபீப்ரத்-
ப்ரணவம் உச்சாரயன் ||

(ருத்ராத்யாய:—10. 10)

எனக் குறிப்பிடுகிறார். சிவதனுசு தீயசகதிகளைத் தேய்த்து நல்லவற்றைக் காப்பாற்றுகிறது என்பது கருத்தாகும்.

அழிக்க முடியாத ப்ரம்மமே 'ஓம்காரம்' ஆகும் என உபநிஷத்துக்கள் கூறுகின்றன. பிறவிப் பெருங்கடல் நீந்தி இறைவனடி சேருவதற்கு ஓம்காரமே உயர்ந்த மந்திரமாக வழி காட்டுகிறது:

''ஓம் இதி ஏகாக்ஷரம் ப்ரம்ம
வ்யாஹரன் மாமனுஸ்மரன் |
யோப்ரயாதி த்யாஜன் தேஹம்
ஸ யாதி பரமாம் கதிம்'' ||

என பகவத்கீதையும் இதனையே வற்புறுத்துகிறது. பதஞ்சலி முனிவரும் மூல முழு முதலின் அடையாளம் ப்ரணவமே என்பர். 'ஓ' என்ற தொடர் மூன்று உலகங்களையும், மூன்று வேதங்களையும் மூன்று அக்னிகளையும் உணர்த்தும் என வாயுபுராணம் குறிக்கும்.

'ப்ரணவ' என்ற சொல்லை மூன்றாகப் பகுக்கலாம்: ப்ர + ண + வ; ப்ர என்பது ப்ரபஞ்சம்; 'ண' என்பது இல்லை; 'வ' என்பது 'நீ' எனத் தனித்தனிப் பொருள் தருவதாகும். ப்ரபஞ்சம் மாயையானது. அது இல்லை, உனக்கது சொந்தமும் இல்லை. எனவே நீ முயற்சி செய்ய வேண்டியதெல்லாம் சிவத்தை நோக்கிய தியானமே ஆகும் என்பது சிவபுராணம். உயிர் வாழ்வதற்கு இன்றியமையாத மூச்சுக் காற்று 'ஓம்' என்ற ஒலியில் அடங்கியிருக்கிறது என லிங்கபுராணம் சொல்லுகிறது.

ஓமென்னும் ப்ரணவமந்திரம் மூல மந்திரம் என அழைக்கப்படுகிறது. 'ஓம்' என்ற மந்திரத்தை உச்சரித்த

பின்னரேயே வேறு எந்த மந்திரத்தையும் உச்சரிக்க வேண்டும் என்பது மந்திர சாஸ்திரத்தின் விதியாகும். நாதத்தையும் பிந்துவையும் அதாவது சிவத்தையும் சக்தியையும் இணைத்து அண்ட கோளங்களையும் இந்த ஓம்-ஒலியே படைக்கிறது.

அ+உ+ம் சேர்ந்து 'ஓம்' என்ற ஒலி உண்டாகிறது. படைத்தல், காத்தல், தனக்குள் இழுத்தல் என்பது இதன் தத்துவ விளக்கம்.

பண்டைக்காலத்தில் மாளவதேசம் என வழங்கப் பெற்ற தற்போதைய மகாராஷ்டிர மாநிலத்தில் நர்மதை நதிக்கரையில் அமைந்திருக்கும் ஜோதிர்லிங்கத் தலம் ஓம்காரமாகும். இக்ஷ்வாகு வம்சத்தில் உதித்தவரும் தம்முடைய புதல்வியரை சௌபரி முனிவருக்கு மணம் செய்து கொடுத்தவரும் புகழ்பெற்று விளங்கியவருமான 'மாந்தாதா' இந்நகரத்தில் ஆட்சி செலுத்தியதால் இத்தலம் 'மாந்தாதா' என்றும் அழைக்கப் பெறுகிறது.

ஓங்காரேசுவரக் கோயிலில் மாந்தாதாவின் விக்ரகமும் அமைந்து பூஜையும் செய்யப் பெறுகிறது. ப்ரணவத்தின் வரி வடிவமாக விளங்கும் விநாயகர் ஐந்து முகம் கொண்டவராக விளங்கிக் கொண்டு பக்தர்களுக்கு அருள்பாலிக்கின்றார். இங்கே நர்மதை நதி இரண்டு கிளையாகப் பிரிந்து மீண்டும் கூடுவது, பார்ப்பதற்கு ஓங்காரவடிவமாகக் காட்சியளித்து நம்மை அதிசயிக்க வைக்கிறது.

ஸ்ரீ ரங்கத்திற்கு மாலையிட்டது போல் அமைந்து காவிரி ஆறு இரண்டாகப் பிரிந்து மீண்டும் சேர்வதை இது நினைவுபடுத்துகிறது, ஓங்காரேசுவரர் திருக்கோயில் ஒரு மலையின் உச்சியில் அமைந்துள்ளது. இங்குள்ள சிவலிங்கம் தானாகத் தோன்றிய 'சுயம்புலிங்கம்' ஆகும். இந்த லிங்

கத்திற்கு அருகிலேயே விந்தியமலை வழிபட்ட பார்த்திவ லிங்கம் ஒன்றும் பூஜையில் இடம் பெறுகிறது.

அமரேசுவரர் என்று இந்த உலகம் அழைக்கப் பெறுகிறது. ஓங்காரேசுவரருக்குத் துணை லிங்கமாக உள்ளது கர்த்தமேசலிங்கம் ஆகும்.



ஓங்காரீசுவரர்




த்யான சுலோகம்

காவேரிகா நர்மதயோ: பவித்ரே
ஸமாகமே ஸஜ்ஜன தாரணாய
ஸதைவ மாந்தாத்ரு புரே வஸந்தம்
ஓங்காரமீஶம் ஶிவமேக மீடே

நாரதர் புண்ணியத் தலங்களைத் தரிசித்துக் கொண்டு விந்தியமலையை அடைந்தபொழுது விந்தியமன்னன் மனத்தில் கர்வம் ஓங்கியிருப்பதை உணர்ந்து ஒரு நீண்ட பெரு

மூச்சு விட்டார். இதற்குக் காரணம் என்ன என்று அரசன் கேட்டபொழுது "உன்னை விட மேரு மலை உயர்ந்துள்ளதே, தேவர்களெல்லாம் அங்கு வாழ்கின்றார்களே" என்று கலகத்தின் விதையை வழக்கம் போல் விதைத்து விட்டு விடை பெற்றுச் சென்றார்.

மேருமலையைவிட தான் உயரவேண்டும் என்ற ஆசையால் ஓங்கார வடிவில் யந்திரம் ஒன்று வரைந்து மண்ணால் செய்த சிவலிங்கம் ஒன்றை அதில் நிறுவி ஆறு மாதங்கள் இருந்த இடத்தை விட்டு அசையாது தவம் செய்தான். விந்தியமன்னனுக்கு வரமளிக்க வந்த சிவன் "நீ ஓங்கி வளர்வாயாக! ஆனால் சற்றேனும் இருமாப்புக் கொண்டால் என் அடியார் ஒருவரால் நீ குறுகும்படியாகிவிடும்" என்ற நிபந்தனையையும் விதித்தார். அப்படியும் கர்வமடங்காத விந்தியமலை அகத்திய முனிவரால் அடக்கப்பட்டது என்பதை அறிவோம்.

மாந்தாதாவில் வைடூர்ய மணி பர்வதம் எனும் குன்றின் மேல் கௌரி சோமநாதருடைய ஆலயம் உள்ளது. சோநாதமூர்த்தி 5அடி உயரம் உடையது. இந்தச் சிவலிங்கம் தூய் வெண்மை நிறமாக இருந்த தென்றும் வணங்குவோரின் முற்பிறப்பும், பிற்பிறப்பும் அறிய வைத்ததென்றும் முகலாய மன்னன் ஔரங்கசீப் வந்து பார்த்தபோது அதில் பன்றி உருவம் தெரியவே அதனை நெருப்புக்கு இரையாக்கிக் கருக வைத்து விட்டான் என்ற செய்தியும் வழங்குகிறது.

நர்மதை நதியில் குளித்து எழுபவர்களுக்குப் புண்ணியம் கிடைப்பதுடன் லிங்க அமைப்புடன் கூடிய தெய்வீகபாணங்களும் ஒரு சிலருக்குக் கிடைக்கின்றன. யமுனையில் ஏழு நாட்களும், கயையில் ஐந்து நாட்களும், சரஸ்வதியில் மூன்று நாட்களும், கங்கையில் ஒரு நாளும் நீராடிய புண்

ண்ணியம், நர்மதையைக் கண்டாலே உண்டாகும் என்பது புராண மரபு.

உஜ்ஜைனி-காண்ட்வா ரயில் பாதையில் உள்ள மோர்டக்கா (மோர்க்கடா) ரயில் நிலையத்திலிருந்து ஓங்காரேசுவரர் வரையும் இந்தப் புண்ணிய பூமி உள்ளது. அறச்சாலைகளும் போக்குவரத்து வசதிகளும் உள்ள இத்தலத்தைத் தலயாத்திரை செய்வோர் தவறவிடக்கூடாது.

# 5. வைத்தியநாதம்

“அத்யவேர சக்தி தாதா ப்ரதமே கதைவ்யோபிஷக்” என்றும், ‘வைத்யநாதம்’ என்றும் அழைக்கப் பெறும் ஜோதிர்லிங்கங்கள் தோன்றிய இடங்கள் ஒன்றல்ல; பல! அவற்றுள் தென்னாட்டில், ‘புள்ளிருக்கும் வேளூர்’ என அழைக்கப்பெறும் வைத்தீசுவரன் கோயிலே முதன்மையாகக் கருதப் பெறல் வேண்டும்.

மாயவரம்—தஞ்சை மார்க்கத்தில் வைத்தீசுவரன் கோயில் என்ற பெயரில் ரயில் நிலையம் உள்ளது. சுவாமி வைத்தியநாதேசுவரர்; அம்பிகை—தையல்நாயகி. புள்—ஜடாயு; இருக்கு—ரிக்வேதம்; வேள்—செவ்வேள்—முருகன்; ஊர்—சூரியன் ஆகிய நால்வரும் பூஜித்த தலமாதலின் ‘புள்ளிருக்கு வேளூர்’ என்ற திருநாமம் பெற்றது.

சடாயுபுரி என்றும் வேதபுரி என்றும் கந்தபுரி என்றும்

பரிதபுரி என்றும் தனித்தனிப் பெயர்களாலும் இப்புனிதத் தலம் அழைக்கப் பெறுகிறது. அங்காரகன் வழிபட்ட இட மாதலால் அங்காரகபுரம் எனவும், அம்பிகை வழிபட்டமை யால் அம்பிகாபுரம் என்றும், மந்திரமும் தந்திரமும் மருந்து மாகித் தீராத வினையெல்லாம் ஸ்ரீவைத்தியநாதர் தீர்த்து வைப்பதால், 'வினை தீர்த்தான் கோயில்' என்றும் வழங் கப்பெறுகிறது.

கோயில் ஊருக்கு நடுநாயகமாய், நாற்புறமும் உயர் மதில்களால் சூழப் பெற்றுள்ளது. சுவாமி சந்நிதி மேற்கு நோக்கியும் அம்பாள் சந்நிதி தெற்கு நோக்கியும் அமைந் துள்ளது. அம்மன் கோயிலின் எதிரே சித்தாமிருத தீர்த்தம் எனும் திருக்குளம் உள்ளது.

நீரலைகளைத் தழுவி வரும் தென்றல், அருள்மிகு நாய கியின் திருப்பாதங்களை மெல்ல வருட, அன்னையின் முன் வருபவர் யாருக்கேனும், பேய் பிசாசுகள் பிடித்திருந்தால் அவர்கள் தன்னாலே ஆட, பிடித்த தீவினை ஓட அருள் பாவிக்கும் கருணைக் காட்சியை இங்கே காணலாம்.

இறைவனும் இறைவியும் கைலாயம் விட்டிறங்கி கருணையின் மிகுதியினால் மக்களுக்கு நேரும் பிணிகளைத் தீர்க்க மனமிரங்கி, தைலப் பாத்திரமும் சஞ்சீவி வில்வ மண் மருந்தும் எடுத்துக் கொண்டு இந்தத் தலத்திற்கு வந்ததாக ஐதிகம்.

வருஷத்தில் சில நாட்கள் கதிரவனின் வீச்சு சிவலிங் கத்தின் மேல் படுவது கோயிலின் வியக்கத்தக்க அமைப் பாகும்.

உட்பிரகாரத்தில் சுவாமி சந்நிதிக்கு மேற்புறம் ஸ்ரீ செல்வ முத்துக்குமார சுவாமியின் உத்ஸவமூர்த்தி, தேவ குஞ்சரியோடும், ஸ்ரீவள்ளியம்மையோடும் சேர்ந்து காட்

டும் கோலம் வார்த்தைகளில் வடிக்க இயலாது! சென்று வணங்க வேண்டிய திருத்தலம் இது!

## புராண வரலாறு

இத்தலத்தில் நவக்கிரஹங்கள் வரிசையாக அமைந்துள்ளன. கிரஹம் பிடிக்காத புனிதபூமி இது. இங்கு அங்காரன் வழிபட்டதால் அவருக்குப் பெருமை அதிகம். சூரன் மார்பைப் பிளக்க, சக்தியிடம் குமரன் வேல் வாங்கிய இடம் இதுவே என்பர் பௌராணிகர்.

போரில் விழுப்புண்பட்டோருக்கு முருகன் புண்ணாற்றிய இடமும் இதுவே. இந்த ஊரில் பிறக்கும் பேறு பெற்றாரும், இறக்கும் நிலைவாய்த்தாரும் 'கொடு நரகக்குழி வீழாது' மோட்சமடைவர் என்பது நம்பிக்கை.

ஸ்ரீ செல்வமுத்துக் குமாரசாமிக்கு, கார்த்திகை நாள் தோறும் அபிஷேகம் நடைபெறும். மற்ற நாட்களில் முருகனின் ஆத்மார்த்த பூஜாமூர்த்தியான ஸ்ரீ முத்துலிங்கத்திற்கே அபிஷேகம். "முருகப்பெருமானுக்கு வழிபாடு நடந்த பின்னர்தான் சுவாமிக்கே பூஜை" என்ற சம்பிரதாயம் இத்தலத்தின் தனிச்சிறப்பாகும்.

செல்வமுத்துக் குமாரசுவாமிக்கு அர்த்தஜாமப் பூஜையின் போது சார்த்தும் சந்தனமும் பச்சைக் கற்பூரமும் குங்குமப்பூவும் கலந்தது; விரும்பும் பலன்களைத் தரவல்லது. பங்குனி மாதத்தில் நடைபெறும் பிரம்மோற்சவத்தின் போது ஸ்ரீசெல்வமுத்துக் குமாரர், ஸ்ரீவைத்தியநாதரிடம் செண்டு பெறும் காட்சி கண்டாரின் மெய் சிலிக்கச் செய்வதாகும்.

எந்த நோயாயினும், வைத்தீசுவரன் கோயிலுக்கு

வந்து திருச்சாந்துருண்டை வாங்கி உண்டால் தீர்ந்து விடுகிறது. இத்தீர்த்தத்தில் 18 தீர்த்தங்கள் உள. சித்தாமிர்த்த தீர்த்தம் தலைமை ஸ்தானம் பெறுவது. காமதேனுவின் பாலும் தேவாமிருதமும் இத்தீர்த்தத்தில் கலந்துள்ளதாகக் கருதப்படுகிறது.

அங்கு சந்தான தீர்த்தமெனும் குளத்தில் வளர்பிறையில் நல்ல நேரத்தில் குளித்தெழுந்து நடுவிலுள்ள மண்ணைக் கிளறி, கையில் எடுத்துக் கொண்டு வந்து அன்னையின் முன்னுள்ள சித்தாமிர்தக் குளத்தில் நீராடி, அந்த நீரையும் கொண்டு வந்த மண்ணில் கலந்து, விபூதி குண்டத்திலுள்ள திருநீற்றையும் சேர்த்து, பஞ்சாக்ஷரத்தை ஜபித்துக் கொண்டே பிசைந்து, செல்வமுத்துக்குமாரரின் சந்நதியின் முன்னுள்ள அம்மியிலிட்டு அரைத்து, கடுகளவாக உருண்டைகள் உருட்டி, தையல் நாயகியின் பாதத்தில் வைத்துப் பூஜித்த பின் உட்கொண்டால் உருவான வியாதிகளெல்லாம் ஓடி விடும்.

''வந்த பேர்க்கு மண்மருந்தளிக்கிறீர்'' என்று பாடும் இவ்வூர்க்கலம்பகம். ''மண்டலத்தில், நாளும் வைத்திய வைத்தியராய்த் தாமிருந்து, கண்டவினை தீர்க்கின்றார் கண்டீரோ? தொண்டர் விருந்தைப் பார்த்து உண்டருளும் வேளூர் என் நாதர், மருந்தைப் பார்த்தால் சுத்த மண்'' என்று நகைச்சுவையோடு பாடுவார் காளமேகப் புலவர்.

சடாயுகுண்டம்: இராவணனால் கொல்லப் பெற்ற ஜடாயுவின் வேண்டுகோளின்படி விபூதி குண்டத்தில் சிதையடுக்கி இராமன் அப்பறவையுருப் பெரியவரைத் தகனம் செய்த இடம் இது. இதிலுள்ள சாம்பரைத்தான் மருந்துருண்டையில் சேர்ப்பது வழக்கமாயுள்ளது.

ஒவ்வொரு, யுகந்தோறும், இவ்வூரிலுள்ள தீர்த்தங்

களும் விருக்ஷங்களும் மாறி மாறி புதுவடிவம் பெற்றுள்ளன. முதல் யுகத்துக்குக் கடம்பமரம், கலியுகத்தில் வேம்பாகக் காட்சியளிக்கிறது. 'வேம்படியால்' எனப்பெயர் பெறும் இவ்விருக்ஷத்தின் கீழேயுள்ள பீடத்தில் ஆதிவைத்தியநாதர் வீற்றிருக்கிறார். வேம்புக் காற்றும் பிணி தீர்ப்பதன்றோ!



வைத்ய நாதம்

த்யானச் சுலோகம்

பூர்வோத்தரே பரஜ்வலிகாநிதானே
ஸதா வஸந்தம் கிரிஜா ஸமேதம்—
ஸுராஸுராராதித பாத பத்மம்
ஸ்ரீ வைத்யநாதம் தமஹம் நமாமி ||

சம்பந்தர், அப்பர், அருணகிரிநாதர், குமரகுருபரர் வள்ளலார் போன்ற பெருமக்கள் போற்றிப் பாடிய மகிமை பெற்ற தலம் இது. சிவபுராணத்தில் "வைத்யநாதம் சிதா பூமௌ" என்ற வரி உள்ளது. 'சிதாபூமி' என்பதற்கு 'ஞான பூமி' என்றும், சிதை அடுக்கிய இடம் என்றும் இரு பொருள் கொள்ளலாம். ஜடாயு தகனம் இத்தலத்திலேயே

நடைபெற்றுள்ளதால் இத்தலத்தையே முதல் "வைத்திய நாதம்" எனக் கொள்வது பொருந்துவதே.

"தீரா நோய் தீர்த்தருள வல்லான் தன்னைத்
திரிபுரங்கள் தீயெழத் திண்சிலையைக் கொண்ட
பேரானைப் புள்ளிருக்கு வேளூரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கினேனே"

என நைந்துருகுவார் நாவுக்கரசர்.

மற்றொரு வைத்தியநாதம்: ஹைதராபாத் மாநிலத்தில் ஜெஸ்டி என்னும் ரயில் நிலையத்திலிருந்து நான்கு மைல் தொலைவில் உள்ளது, இது 'பரலி' என்றும் வழங்கப்படுகிறது. 'பரல்யாம்வைத்தியநாதம்' என்பது புராணச் சுலோகம்.

பீஹார் மாநிலத்தில் கயைக்கு அருகேயுள்ள 'வைத்தியநாதம்' என்ற தலத்திலும் ஒரு ஜோதிர்லிங்கம் உள்ளது. அங்கு நடைபெறும் சடங்குகள் தஞ்சை மாவட்டத்து வைத்தீசுவரன் கோயிலில் நிகழ்வது போன்றே உள்ளன. முடியிறக்கல், மாவிளக்குப் போடுதல் ஆகியன அங்கும் கடைப்பிடிக்கப் பெறுகின்றன.

உயர்ந்த மேட்டில் கோயில் கட்டப்பட்டுள்ளது. மரத்தாலான கலை நுணுக்க வேலைப்பாடுகள் கொண்ட கதவுகள், சாளரங்கள் கண்ணைக் கவர்வன. ஓர் ஆள் அணைத்துப் பிடிக்க முடியாத அகலமான நெடுந் தூண்கள் உள்ளன. இந்த லிங்கம் ராவணனால் கொண்டு வரப்பெற்றது என்று மரபு வழிச் செய்தி கூறுகிறது.

இமயமலைக்குத் தெற்கே யாககுண்டம் அமைத்து பரமசிவனை நோக்கிப் பலகாலம் தவம் இருந்தான் ராவணன். தன் பத்துத் தலைகளில் ஒன்பதை ஒவ்வொன்றாக

யாகத்தில் வெட்டிப் போட்டான். இறுதியில் அவனது தீவிர பக்தியை மெச்சி சிவபெருமான் பகைவர்களுக்கு அஞ் சாத வலிமையையும் அறுந்த தலைகள் மீண்டும் வளரும் நிலையையும் தந்து அருள் புரிந்தான்.

கைலைக்குச் சென்று ஸாமகானம் பாடி ஆத்மலிங்கம் ஒன்றையும் பெற்றான் அவன். அந்தலிங்கம் மிகப்பெரிய தாக இருந்ததால் இரண்டு பகுதியாக்கிக் காவடியில் வைத் துத் தூக்கி வந்தான். செல்லும் வழியில் எங்காவது இறக்கி வைத்தால் அங்கேயே லிங்கம் நிலையாகி விடும் என்பது பரமனின் கட்டளை.

தேவர்களின் சூழ்ச்சியால், வழியில் ராவணனுக்கு இயற் கை உபாதை ஏற்படவே, அந்தணரின் வேடத்தில் வந்த விநாயகரிடம் அதை கீழே வைக்காமல் பாதுகாக்கச் சொல் லிச் சென்றான். பளு தாங்க முடியாதது போல் அந்தணர் லிங்கங்களை அங்கேயே பூமியில் இறக்கி வைத்துவிட்டார்.

திரும்பிய ராவணன் நிலைமை உணர்ந்து அங்கேயே ஒரு குளம் உண்டாக்கி லிங்கத்திற்குப் பூஜை செய்தான். அவன் காலமான பிறகு பைஜு என்ற வேடன் இந்த லிங்கத்தை வழிபட்டதால் 'பைஜ்யநாத' என்ற பெயர் தோன்றிற்று என்பர். மாசி, பங்குனி மாதங்களில் இவ்வூர் விழாக் கோலம் பூணுகின்றது. கங்கை, யமுனை இவற்றின் தீர்த்தங்கள் கொண்டு வரப் பெறுகின்றன.

இது தவிர, தும்கா மாவட்டத்தில் வைத்யநாத்யாம் என்ற புண்ணிய திர்த்தம் உள்ளது. இதன் கரையில் ஒரு ஜோதிர்லிங்கம் உள்ளது. அல்மோடாவிற்கு அருகே ஒரு வைத்திய நாதம் உள்ளது. ஆனால் லிங்கம் சுயம்புவாக இல்லாமையால் இதனை ஜோதிர்லிங்கமாகக் கொள் வதற்கு இல்லை.

பொதுவாக ஜோதிர்லிங்கம் உருவில் சிறியதாக, சுயம்புவாக அமைவது. வைத்தீசுவரன் கோயிலையும், கயைசிதா பூமியையும், பரலியையும் ஜோதிர் லிங்கத் தலங்கள் என்பது ஏற்புடையது.

அத: பரம் ப்ரவக்ஷ்யாமி
வைத்யநாதேச்வரஸ்ய ஹி
ஜ்யோதிர் லிங்கஸ்ய
மாஹாத்ம்யம் ப்ரபவே பாதம் ||

# 6. பீமசங்கரம்

பீமன் எனும் அரக்கன், தன் தாய் கற்கடி என்பவளைப் பார்த்து தன் தந்தை யார்? என வினவினான். தன் தாய் மட்டும் தனித்திருக்கக் காரணம் யாது? என்று கேட்டான். அதற்குக் கற்கடி "உன் தந்தை, இராவணனுடைய சகோதரர் கும்பகர்ணன். அயோத்தி மன்னன் இராமன் என்பவனால் யுத்தத்தில் மாண்டான்.

"எனக்கு விராடன் என்பவரே முதல் கணவர். அவரும் இராமனால் கொல்லப்பட்டார். என் தாயும் தந்தையும் தவமுனி ஒருவரை விழுங்கச் சென்ற போது அவருடைய யோகாக்னி அவர்கள் இருவரையும் சுட்டெரித்துச் சாம்பலாக்கி விட்டது.

"அதற்குப் பின் 'நான் மட்டும் அநாதையாகத் திரிந்தேன். அப்போதுதான் உன் தந்தை என்மேல் அன்பு கொண்டு சிலகாலம் என்னுடன் வாழ்ந்தார். நீ பிறந்தாய்;

திடீரென விட்டுச் சென்ற உன் தந்தை திரும்பி வரவேயில்லை. அவரையும் இராமன் போரில் கொன்று விட்டான்'' என்றாள்.

பீமன் கடுங்கோபம் கொண்டான். தன் தந்தையைக் கொன்ற இராமனைக் கொல்லாது விடுவதில்லை எனச் சபதம் மேற்கொண்டான். பிரம்ம தேவனை வேண்டி நெடுங்காலம் தவம் இருந்தான். உணவு முதலிய எதுவும் உட்கொள்ளாமல் ஒற்றைக் காலில் ஒரே உறுதியுடன் தலத்தில் ஈடுபட்டிருந்த பீமனைக் கண்டு தேவர்கள் நடுங்கினார்கள்.

பிரம்மதேவன் பீமனின் முன் தோன்றி வேண்டிய வரம் யாது என்று வினவிய போது ''அளவிட முடியாத பலம் வேண்டும்'' என்றான் பீமன். கோரியவரத்தைக் கொடுத்து மறைந்தார் பிரம்மா. தன் தாயிடம் ஓடோடி வந்தான்.

பீமன் ''இனி என்னை யாராலும் வெற்றி கொள்ள முடியாது. நம் குலத்தின் அழிவுக்குக் காரணமாயிருந்த தேவர்கள் மற்றும் யாவரானாலும் பூண்டோடு அழிப்பேன்'' என்று கர்ஜித்தான். திக்விஜயம் மேற்கொண்டான்.

காமரூபம் என்ற நாட்டையடைந்து அந்நாட்டு அரசன் பிரியதர்மனைச் சிறைபிடித்தான். பின் ஒவ்வொரு நாடாகச்சென்று அனைத்தையும் கைப்பற்றினான். தேவர்கள் ஓடி ஒளிந்தார்கள்.

## புராண வரலாறு

பீமன் எல்லா உலகங்களுக்கும் அதிபதியானான். அவனால் விரட்டப்பட்ட தேவர்கள் மகாகோச நதிக்கரை

யில் ஒன்று கூடி எதிர்காலம் பற்றி திட்டமிட்டனர். சிவ பெருமானை வேண்டுவதே தீர்வுக்கு வழி என ஒருமித்த கருத்துடையவராயினர்.

அவர்களது கடுந்தவத்திற்கு மனமிரங்கிப் பரமன் காட்சியளித்தான். வேண்டும் வரம் யாது? என வினவினால் "பீமனை அழித்தாலொழிய நாங்கள் பிழைக்க முடியாது" எனக் கூவிக் கதறினர் தேவர்கள். சிவனின் அருட்பார்வை அவர்களுக்குத் தெம்பு தந்தது.

பீமனால் சிறையில் அடைக்கப்பட்ட காமரூப மன்னன் பிரியதர்மன் தன் மனைவி தக்ஷிணையுடன் சிறையிலேயே மண்ணால் சிவலிங்கம் அமைத்து, நம்பிக்கையுடன் பூஜை செய்து வந்தான். இதனை அறிந்த பீமன் உடைவாளை உருவிக் கொண்டு சிறைச்சாலைக்கு ஓடோடி வந்தான். "நீ இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறாய்?" என ஆத்திரத்தோடு வினவினான்.

"எல்லாம் வல்ல பரமேசுவரனை ஆராதித்து வருகிறேன்" என அமைதியாகப் பதிலிறுத்தான் பிரியதர்மன். "என்னை விட பலசாலியா உன் சிவன்? உன்னைக் கொல்லப் போகிறேன். உன் பரமன் வ்ந்து பாதுகாக்கட்டும், பார்ப்போம்" என்று பிரியதர்மன் வழிபட்ட லிங்கத்தைத் தூர எறியச் சொன்னான்.

லிங்கத்தினின்று வெளிப்பட்ட கால்காலன் பீமன் ஏவிய சூலத்தைப் பொடிப் பொடியாய்ச் சிதறச் செய்தான். மாயையால் பீமன் தோற்றுவித்த அரக்கர்கள் யாவரும் மண் பொம்மைகளாய் உடைந்து, பூமியில் சாய்ந்தனர். "அசுரனை அழிக்க இவ்வளவு ஆர்ப்பாட்டமா?" என்று சமயம் பார்த்துப் பேசினார் நாரதர். சிவன் 'ஹூம்' என ஒலித்த ஒலி பீமனின் ஆயுளைப் பிரித்தது.

பின் பீமனால் சிறைபிடிக்கப் பெற்ற யாவரும் விடு விக்கப்பட்டனர். பிரியதர்மன் அனேக வரங்களைப் பெற்று மகிழ்ந்தான். தான் பூஜை செய்த லிங்கத்தில் ஈச வரன் என்றும் தங்கி அருள்பாலிக்க வேண்டும் என்று சிவ பெருமானை வேண்டிக் கொண்டான் பிரியதர்மன். பீம சங்கரம் எனும் ஜோதிர்லிங்கம் உருவானதன் பின்னணி இது. இந்த லிங்கத்திற்குத் துணை பீமேசலிங்கம் ஆகும்.



பீமசங்கரம்

தியானச் சுலோகம்

யம் டாகினீ சாகினிகா ஸமாஜே
நிஷேவ்யமாணம் பிசிதானைச்ச |
ஸதைவ பீமாதிபத்ப்ரஸித்தே
தம் ஶங்கரம் பக்தஹிதம் நமாமி ||

திருக்கோயில் ஒரு காட்டின் மத்தியில் மலை மேல் உள்ளது. மகாராஷ்டிர மாநிலத்தில் பூனாவிலிருந்து 57 மைல் தொலைவிலும் பம்பாயிலிருந்து 62 மைல் தொலை விலும் உள்ளது. மாஞ்சர் என்ற நகரை அடுத்து போவா கிரி என்ற சிற்றூரில் இக் கானகம் உள்ளது.

பீமா அல்லது சந்திரபாகா எனப்பெயர் பெற்ற நதி இதனை அடுத்த வளைய வருகிறது. நானபட்னாவிஸ் என்பவர் இந்த ஆலயத்தை அழகுறத் திருத்தி அமைத்தார் என்பர்.

வெளிப்புறத் தரைமட்டத்துக்குக் கீழே மூலதானத்தில் ஒரு முழ நீள உயரத்தில் லிங்கம் தோன்றியுள்ளது. சிவராத்திரி நாளன்று மக்கள் திரண்டு வந்து சிவபெருமானை வழிபடுவது விசேஷமாக உள்ளது.

பிமசங்கரரின் ஆலயம் தற்போது சிதைந்த நிலையில் காணப்படுகிறது. ஆலயத்தினுள் இரு நந்திகேசுவரர்கள் உள்ளனர். சிவபெருமான் சினந்து எழுந்து, பீமனை அழித்த தலமாதலின் டாகினீ என்றும் இவ்வூர் பெயர் பெறுகிறது.

சந்திரபாகா நதியில் நீராடி, சங்கரனை வழிபடுபவர் சாந்தி பெறுவர் என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

அத: பரம் ப்ரவக்ஷ்யாமி
மாஹாத்ம்யம் பைம ஶங்கரம்
யஸ்ய ஶ்ரவண மாத்ரேண ஸர்வாபீஷ்டம் லபேந் நர:

# 7. இராமேசுவரர்

இதி விஶ்வ ஸமாக்யாதம்
ஜ்யோதிர் லிங்கம் ஶிவஸ்யது
ராமேஶ்வராபிதம் திவ்யம்
ஶ்ருண்வதாம் பாபஹாரகம் ॥

இராமாயணகாலம் முதல் போற்றப் பெறும் புனிதத் தலம் இது. திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், அருணகிரிநாதர், தாயுமானவர் போன்ற பெரியார்கள் பலர் இத் தலத்தினைப் புகழ்ந்து பாடியுள்ளார்கள்.

காசிக்கு நிகராசக் கருதப்பெறுவது இராமேசுவரம், மூர்த்தி தலம் தீர்த்தம் எனும் மூன்று உருவிலும் அருள் பாலிக்கும் புண்ணிய பூமி. நினைத்த மாத்திரத்தில் முக்தியளிக்கக் கூடியது எனும் பெருமை வாய்ந்த ஜோதிர்லிங்கத் தலம் இது.

மூல லிங்கமான ராமநாதசுவாமியின் திருமேனி மணலால் ஆனது. அபிஷேகங்களாலும் காலப்போக்கில் மணலுருவம் கரையாமல் கல்போல் இறுக்கமாகி விட்டது. இராமபிரான் மணலை எடுத்து, சீதையினால் லிங்க உருவாக்கப் பெற்று விளங்கும் இத்திருதலத்து மண்ணில் யாரும் ஏர் கொண்டு உழுவதில்லை.

சிவலிங்க அமைப்பு, செக்கு போலத் தோன்றுவதால் செக்காட்டும் தொழிலும் இங்கில்லை. மண்ணின் பெருமையைக் காக்க எண்ணிய மக்கள் இங்கே மணலெடுத்துச் சூளை போடுவதும் இல்லை. இத்தலத்திற்கெனத் தல விருட்சமும் இல்லை.

## புராண வரலாறு

சீதையை மீட்டு, பிராமணனாகிய இராவணனை அழித்த பாபத்தைப் போக்க எண்ணிய ஸ்ரீராமர் சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்து வழிபட எண்ணினார். கயிலைமால் வரையிலிருந்து சிவலிங்கம் கொண்டு வர அனுமானைப் பார்த்தார்.

☞ அனுமான் வரத்தாமதமானதால் குறித்த நேரத்தில் பூஜை செய்ய வேண்டுமே என்ற இராமரின் கவலையறிந்து அவர்து தர்ம பத்தினியாம் ஜானகி தன் கையினால் உரு வாக்கிய லிங்கமே இராமலிங்கம். அம்மையின் பெயர் மலைவளர் காதலி.



இராமேச்வரர்

த்யானச் சுலோகம்

ஸுதாம்பரபர்ணி ஜலராஶி யோகே
நிபத்ய ஸேதும் விஶிகைரஸங்க்யை:
ஸ்ரீ ராமசந்த்ரேண ஸமர்பிதம் தம்
ராமேஶ்வராக்யம் நியதம் நமாமி ||

இராமேசுவரத்தில் கோயில் வழிபாடும், வங்காளவிரி கூடாவும் இந்துமாக்கடலிலும் ஒன்றுசேரும் தனுஷ்கோடியாம் சேது சங்கமத்தில் நீராடலும் செய்தால் தான், காசி யாத்திரை நிறைவெய்தியதாகக் கருதப்படும். இக்கோயிலில் நள்ளிரவுப் பூஜை சிறப்பாகக் கொண்டாடப் பெறுவது.

சேது என்றால் பாலம் என்பது பொருள். இராமபிரான் இலங்கைக்குக் கட்டிய அணை இங்கிருந்து தொடங்கியதாகும். ஸ்ரீ இராமர் தன் வில் முனையால் கீறி, அணை கட்டும் பணியைத் தொடக்கி வைத்ததால் தனுஷ்கோடி (தனுசு—வில், கோடி முனை) எனப் பெயர் பெற்றது. இங்கே பித்ருக்கடன் செய்தல் விசேஷம்.)

அனுமானும் பூஜை தொடங்குமுன் வந்து சேரவே, அவர் கொண்டு வந்த விசுவ லிங்கமும், இராமலிங்கத்தின் பக்கத்தில் வைத்துப் பூஜிக்கப் பெறுகிறது. குப்தேசலிங்கம் இதற்குத் துணை லிங்கமாகும்.

தீர்த்தங்கள் : இந்தத்தலம் மிகப்பல தீர்த்தங்களைச் சிறப்பாகக் கொண்டது. அவற்றுள் குறிப்பிடத்தக்கன: அக்கினி தீர்த்தம், கோடி தீர்த்தம், ராமர் தீர்த்தம், லக்ஷ்மண தீர்த்தம். ஆவன. சீதையைச் சிறை மீட்டு அவள் கற்பில் சிறந்தவள் என்பதை உலகறிய வேண்டும் எனக் கருதி அக்னி மூட்டி அதில் பிரவேசித்து வெளிவரச் செய்தான்.

சீதா தேவியைச் சோதிக்க நேர்ந்ததே எனக் கவலையுற்ற அக்னி தேவன் தன் பாபம் தீர வேண்டிக் கடலில் நீராடிய இடமே 'அக்னி தீர்த்தம்' ஆகும். "இத்தீர்த்தத்தில் நீராடினவர் யாரானாலும் அவர்தம் பாபம் நீங்கும்" என்று இராமர் அருள்பாலித்த தீர்த்தம் இது.

கோடி தீர்த்தம் : விசாலாட்சியம்பிகை சந்நிதிக்கும் ஜோதிர் லிங்கத்துக்கும் நடுவில் உள்ளது. இதில் நீராடுபவர் பல நன்மைகளை அடைவர் என்பது அநுபவ உண்மை குறிப்பாக மகப்பேற்றை அடைவர்.

ஸ்ரீராம தீர்த்தம் : ஸ்ரீ ராமரை வேண்டித் தவம் செய்த அகத்திய முனிவரின் சிஷ்யர் சுதிட்சணர் எல்லா ஆற்றல்களையும் இத்தீர்த்தத்தில் நீராடிப் பெற்றார் என்பது மரபு.

ஸ்ரீலக்ஷ்மண தீர்த்தம் : கோயிலுக்கு மேற்கே சாலைக்குத் தென்புறம் உள்ளது. நீராழி மண்டபத்துடன் கூடியது. இந்திரஜித்தைக் கொன்ற பாபத்தை லக்ஷ்மணன் போக்கிக் கொண்ட தீர்த்தம் இது. பிராமணர்களையோ, புராணம் சொல்பவர்களையோ, குருவையோ அவமானம் செய்த பாபம் நீங்க இத்திருகுளத்தில் நீராடல் நல்லது.

கோயில் : தென்னகத்தின் மிகப் பெருங் கோயில்களுள் இராமேசுவரமும் ஒன்று. இதனுடைய திருச்சுற்று மண்டபமும் குறிப்பாக (மூன்றாம் பிராகாரம்) உலகிலேயே மிகப் பெரியது. இரு புறங்களிலும் ஐந்தடி உயரமுள்ள மேடையின் மேல் தூண்களின் வரிசையின் நடுவே இப் பிராஹாரங்கள் அமைந்துள்ளன.

பிராஹாரங்களின் மொத்த நீளம் 3850 அடி. வெளிப் பிராஹாரத்தில் 1200 தூண்கள் இருக்கின்றன. அவற்றின் உயரம் தரையிலிருந்து மேல்தளம் வரை 30 அடி. மிக அழகிய சிற்ப வேலைப்பாடுகள் கொண்டுள்ளன.

கோயில் 865 அடி நீளமும் உடையதாய் திராவிடக் கட்டிடக் கலைக்கு ஓர் எடுத்துக் காட்டாய் விளங்குகிறது. மண்டபங்கள் பாண்டிய நாட்டுக் கலை அமைப்பை

யுடையன. நீளமான பெருங்கற்களினால் உத்திரங்கள் வேயப் பெற்று மூலத்தானம் திகழ்கிறது.

தொடக்கத்தில் கூரையால் வேயப்பட்டிருந்த இக் கோயில் கி. பி. 12ஆம் நூற்றாண்டில் இலங்கை மன்னன் பராக்கிரம பாகுவினால் கட்டப் பெற்றது என்பதற்குச் சான்றுகள் உள்ளன. பின்னர் இராமநாதபுரம் சேதுபதிகள் கோயில் திருப்பணிகளை மேற்கொண்டு, மேலும் விஸ்தாரம் செய்துள்ளார்கள். 22 அடி நீளம், 12 அடி அகலம், 17 அடி உயரமுள்ள சுண்ணாம்புச் சுதையால் கட்டப் பெற்ற பெரியநந்தி காட்சிக்கு விருந்தாகும்.

செட்டி நாட்டுக்காரர்களும் பல திருப்பணிகளைச் செய்துள்ளனர். நாயக்க மன்னர்களின் பங்கும் உண்டு. கோயிலுக்கு வெளியே 22 தீர்த்தங்கள் இருப்பது போல் கோயிலுக்குள்ளேயும் 22 தீர்த்தங்கள் ஊருணிகளாய் உள்ளன. இராமேசுவரத்திற்கு வருவோர் அனைத்துத் தீர்த்தங்களிலும் நீராடினால் வாழ்வில் புது மலர்ச்சி பெறுவர் என்பது அநுபவ உண்மை.

பல்வேறு சந்நிதிகள் மட்டும் 19 உள்ளன. இவற்றுள் மஹாகணபதி சந்நிதி, பெருமாள் சந்நிதி, சந்தான கணபதி சந்நிதி, சுக்கிரவார மண்டபம் (இதில் அஷ்டலக்ஷ்மிகளின் திருவுருவங்கள் சிற்பங்களாய் அலங்கரிக்கின்றன), சுப்பிரமணியர் சந்நிதி, சேதுமாதவர் சந்நிதி, நடராஜர் சந்நிதி, ஆஞ்சநேயர் சந்நிதி ஆகியவை குறிப்பிடத்தக்கன. நீண்ட நெடு மதில்களையுடையது இப்பெருங்கோயில்.

கந்தமனபர்வதம் : கோவிலுக்கு வடமேற்கே 3கிலோ மீட்டர் தூரத்தில் ஒரு மணற்குன்றின் மேல் கோபுரத்து

டன் கூடிய மண்டபமாக இது விளங்குகிறது. மேலே செல்வதற்குப் படிகள் உள்ளன. இங்கிருந்துதான் ஸ்ரீ அனுமன் இலங்கைக்குக் கடல் தாவிச் சென்றார் என்பது ஐதிகம். சக்தி பீடங்களில் ஒன்றாகவும் இது கருதப்படுகிறது. பர்வதவர்த்தினியின் பிறந்த வீடு என்பது மரபு.

ஸ்ரீகோதண்டராமர் கோயில் : தனுஷ்கோடிக்குச் செல்லும் ஐந்தாவது மைலில் உள்ளது. விபீஷணன் ஸ்ரீராமனிடம் புகலடைந்தது இங்கேதான். அவனுக்கு இங்குதான் ஸ்ரீராமர் பட்டாபிஷேகம் செய்து வைத்ததாகப் புராண மரபு புகல்கிறது.

நடராஜபுரம் : தனுஷ்கோடிப் பாதையில் 3 கிலோ மீட்டரில் உள்ள சிறிய ஊர். இங்கே உள்ள அம்பாள் நம்பு நாயகி அம்மன். கோரிய வரத்தைக் கொடுக்கும் தெய்வம். தென்புறம் காவல்தேவி, வடக்கே பத்ரகாளி, கிழக்கே உஜ்ஜைனி காளி, மேற்கே துர்க்கையம்மன் ஆகியோர் எழுந்தருளியுள்ளனர்.

தனுஷ்கோடி : வில்லின் முனை இங்கே சேதுஸ்தானம் செய்வோருக்குச் சகலபாபங்களும் நீங்குகின்றன. கங்கையில் உயிர்விடுவதும் நர்மதைக் கரையில் நோன்பிருப்பதும், குருக்ஷேத்திரத்தில் தானம் செய்வதும் சிறப்பு என்பர். இம் மூன்று புண்ணியங்களையும் ஒரே இடத்தில் வழங்குவது 'தனுஷ்கோடியாகும்'. சிலவருடங்களுக்கு முன் அடித்த புயலால் இப்பகுதி பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளது.

கோகுமா தவங்கள் செய்து குன்றினார் தம்மை
எல்லாம்
வீடவே சக்க ரத்தால் எறிந்துபின் அன்பு கொண்டு
தேடிமால் செய்த கோயில் திருஇரா மேச்சுரத்தை
நாடிவாழ் நெஞ்சமே நீ நன்னெறி யாகு மன்றே

என்பது திருநாவுக்கரசின் அருள்வாக்காகும்.

# 8. நாகேசுவரர்

சிவபுராணத்தில் கூறப்பட்டுள்ள அடிப்படையை ஆதாரமாகக் கொண்டு இந்த ஜோதிர்லிங்கத்தை இரண்டு இடங்களில் உள்ளதாகக் கூறினோம். மேற்படி இடங்களில் இந்த லிங்கம் இருப்பதாக வழக்கும் இருந்து வருகிறது.

குஜராத் மாநிலத்தில் துவாரகையிலிருந்து பேட்துவாரகைக்குச் செல்லும் வழியில் ஒன்று உள்ளது.

ஹைதராபாத்திற்கு வடக்கே ஹோண்டி ரயில் நிலையம் உள்ளது. இந்த ரயில் நிலையத்திலிருந்து சுமார் 14மைல் தூரத்தில் ஔண்ட் என்ற இடம் உள்ளது. அதற்கு அருகே ஒரு லிங்கம் உள்ளது.

ஆலய அமைப்பு: மற்ற ஜோதிர் லிங்கங்களைப் போல் இல்லாமல் இந்த லிங்கம் தெற்கு முகமாகத் திரும்பியுள்ளது ஒரு மாறுபட்ட விசேஷமாகும். மேலும் இங்கு மற்றொரு விசேஷமும் உண்டு.

அதாவது, பாணமிருக்கும் பீடத்திலுள்ள கோமுகம் கிழக்கு நோக்கி உள்ளது. இம்மாதிரியான லிங்க அமைப்பு காணக்கிடைக்காத ஒன்று. இத்தகைய லிங்க அமைப்பு மற்ற ஜோதிர் லிங்கங்களின் அமைப்பிலிருந்து வித்தியாசப் படுகிறது. இதற்கு ஒரு காரணமும் கூறப்படுகிறது.

நாமதேவ சுவாமிகள் பஜனை செய்வதில் வல்லுனர். அவர் ஒரு பெரிய சிவபக்தர்; பலராலும் நன்கு மதிக்கப்பட்டவர்; அவர் ஒரு சமயம் இந்த ஜோதிர்லிங்கம் இருக்கும் இடத்திற்கு வந்தார், காணக் கிடைத்தற்கறிய லிங்க

அமைப்பில் மணம் நெகிழ்ந்து மெய்மறந்து சிவனைப் பிரார்த்தித்து பஜனை செய்து கொண்டிருந்தார்.

அந்தக் கோவிலை அது சமயம் தங்களுடைய நிஷ்ய பூஜை முதலிய கடன்களை முடித்துக் கொண்டு பல அந்தணர்கள் சிவபெருமானைத் தரிசித்து அருள்பெற வந்திருந்தனர்.



நாகேசுவரர்

த்யானச் சுலோகம்

யாம்யே ஸதங்கே நகரே (அ)திரம்யே
விபூஷிதாங்கம் விவிதைஸ்ச போகை: |
ஸத்பக்தி முக்தி ப்ரதமீஸமேகம்
ஸ்ரீநாகநாதம் ஸரணம் ப்ரபத்யே ||

அது சமயம் நின்று மெய்மறந்து பஜனை செய்து சிவனை வழிபட்டுக் கொண்டிருந்த நாமதேவ சுவாமிகளை சற்று விலகி நிற்குமாறு வேண்டினர். காரணம் அவர் சந்நிதியை மறைத்து நின்று கொண்டிருந்தார்.

"கடவுள் எந்தத் திசையைப் பார்க்கவில்லை என்று கூறுங்கள். நான் அந்தத் திசைக்குச் செல்கிறேன்." என்று சுவாமிகள் கூறினார். அங்கிருந்த அன்பர்கள் நாம தேவ சுவாமிகளின் பதிலைக் கேட்டு அவமானமடைந்தனர்.

அதனால் அவர்களுக்கு மிகுந்த கோபம் உண்டாகி, உடனே சுவாமிகளைப் பலாத்காரமாக இழுத்துச் சென்று தெற்குப் புறத்தில் விட்டு விட்டு வந்தனர்.

ஆனால் அந்தச் சமயம் அங்கு வந்த அந்தணர்கள் கோயிலில் கர்ப்பக் கிரகத்தின் லிங்கத்தின் அமைப்பில் ஏற்பட்ட அமைப்பைக் கண்டு அதிசயித்துப் போயினர்.

காரணம், அதுவரையிலும் வடக்குத் திசை நோக்கிக் காணப்பட்ட லிங்கபெருமான் தெற்குமுகமாகத் திரும்பிக் காட்சியளித்து அருள் பாலித்ததுதான்.

பக்தருக்கு அடிமையான கடவுள் தனது பக்தருக்கு இன்னல் ஏற்படுவதைப் பொறுத்திருப்பாரா? சுவாமிகளின் பக்தியின் தாத்பரியத்தை உணர்ந்த அந்தணர்கள் தங்களுடைய தவறை உணர்ந்து வெட்கித் தலை குனிந்தனர்.

தாங்கள் ஒரு சிவபக்தருக்கு இழைத்த இன்னலையும் கொடுமையையும் உணர்ந்து மிகவும் மனம் நொந்து போயினர்.

சிவபக்தரை அவமதித்தவர் சிவபெருமானின் அருளைப் பெற முடியாது என நன்கு உணர்ந்த அந்தணர்கள் நாம

தேவ சுவாமிகளின் இருப்பிடத்தை நோக்கி ஓடினர். அவரது இரு பாதங்களையும் கெட்டியாகப் பிடித்து அவரை அடிபணிந்தனர்.

தங்களுடைய பிழையை உணர்ந்து வெட்கித் தலை குனிவதாகவும், சிவ-அபசாரம் நீங்க உடனே கோவிலுக்கு வருமாறும் அவரை வேண்டினர். மனமிரங்கி நாமதேவ சுவாமிகளும் அவர்களுடன் கோவிலுக்குச் சென்றார்.

அப்பொது தெற்கு நோக்கித் திரும்பிய ஈசன் இன்றும் தெற்கு நோக்கியே இருந்து பக்தர்களுக்குக் காட்சி அளிக்கிறார்.

இந்த லிங்கத்தைப் பற்றி மற்றொரு காரணமும் உள்ளது. முன்பு ஒரு காலத்தில் இந்த லிங்கம் நீரில் மூழ்கி இருந்தது. இதனைத்தரிசிக்க வந்த பஞ்ச பாண்டவர்கள் லிங்கப் பெருமானைக் காணாமல் மிகவும் ஏமாற்றமடைந்தனர். அங்கு இருந்தவர்களிடம் லிங்கத்தைப் பற்றின விவரங்களைச் சொல்லும்படிக் கேட்டு விஜாரித்தனர். அவர்கள் மூலம் லிங்கம் நீரில் மூழ்கி விட்டதான செய்தி அறிந்தனர்.

உடனே பீமன் தனது கதாயுதத்தினால் அந்த நீரை விலக்கி ஈசனைத் தரிசிக்க உதவினதாகவும், அது முதல் லிங்கத்தை வழிபடுதல் மிகவும் எளிதாக அமைந்ததாகவும் தெரிய வருகிறது.

மலைச்சரிவானதும் நீர்சூழ்ந்ததுமான இடத்தில் இந்தக் கோயில் அமைந்துள்ளது. மலையைக் குடைந்து வந்து குகைக்குள் இந்தக் கோவிலின் கர்ப்பக்கிருஹம் அமைந்துள்ளது.

மற்றொரு விசேஷமான அம்சம் யாதெனில் இந்தக்

குகைக்கு மேல் மற்றொரு கர்ப்பக்கிருஹம் அமைந்து அதனிலும் ஒரு சிவலிங்கத்தையும் ஒரு நந்தியையும் பிரதிஷ்டை செய்துள்ளார்.

இந்த அமைப்பு ஒரு வேளை பிறமதத்தினரின் தாக்குதலிலிருந்து லிங்கத்தைப் பாதுகாக்க ஏற்படுத்தப்பட்டிருக்குமோ என்று கூட ஐயமுறத் தோன்றுகிறது. பற்பல சித்திரங்கள் இந்தக் கோயிலின் கர்ப்பக் கிருஹத்தை அலங்கரிக்கின்றன. அவற்றில் தாருகாவன முனிவர்களின் மனைவிமார்களின் சிற்பங்கள் மிகவும் குறிப்பிடத்தக்கவை.

## புராண வரலாறு

தாருகாவனத்தில் வசித்து வந்த முனிவர்களுக்கு விசித்திரமான எண்ணங்கள் இருந்தன. அதாவது ''உலகில் கடவுள் எஸ்பவர் கிடையாது. அவர் நமது நன்மைதீமைக்கு அனுசரித்துப் பலனளிப்பதில்லை. ஆனால் ''நாம் செய்யும் தொழிலே தெய்வம்'' என்றபடி நமது கர்மங்கள் அல்லது செயல்கள் தான் பலனளிக்கும்.'' என்ற அசைக்க முடியாத கொள்கையுடன் வசித்து வந்தனர்.

இதை அறிந்த சிவபெருமான் பிக்ஷாடனரின் வடிவில் உரு வெடுத்தும், திருமால் மோகினியின் உருவம் எடுத்தும், தாருகாவனம் சென்று தங்கி, தாருகாவன முனிவர்களின் எண்ணங்களை மாற்றி உண்மையை உணரச் செய்தனர் எனப் புராணம் கூறுகிறது. இந்த வரலாற்றைக் கூறுவது தான் நாகேசம்.

## மற்றொரு புராண வரலாறு

முன்னொரு காலத்தில் தாரகை-தருகன் என்ற அரக்க தம்பதியர்கள் வாழ்ந்து வந்தனர். தாருகை பார்வதியைக்

குறித்து, கடுமையான தவம் செய்து வந்தாள். அதன் பலனாகப் பல வரங்களைப் பெற்றார், அழகான ஒரு நந்தவனத்தை அமைத்து அதில் வசித்து வந்தாள்.

அது அதிகமான விஸ்தீரணம் கொண்டதாக அமைந்திருந்தது. பார்வதியின் அருளினால் வரங்களைப் பெற்றதால் மமதை அடைந்த தாரகையும் தாரகனும் அங்கு வசித்து வந்த அந்தணர்களை மிகவும் ஹிம்ஸை செய்து வந்தனர்.

முனிவர்களில் ஒருவரான ஔர்வமுனிவர் அரக்கர்களின் தொல்லையைத் தாங்க முடியாமல் சினம் கொண்டார். அவர் அரக்கர்கள் மடியச் சாபம் கொடுத்தார். அதனால் பல அரக்கர்கள் மடிந்து போயினர்.

இதனைக் கண்ட தாருகை மீதியுள்ள அரக்கர்களைக் காப்பாற்ற எண்ணினாள். ஆகவே கடலின் நடுவே வசிக்கும் இடத்தை ஏற்படுத்தி மீதியுள்ள அரக்கர்களுடன் அங்கு வசித்து வந்தாள்.

ஒரு சமயம் ஸுப்ரியன் என்ற வியாபாரி சிவபக்தனாகி சிவ ஆராதனையில் தன்னை மறந்த நிலையில் ஈடுபட்டிருந்தான். அது சமயம் அவனைத் தாருகை சிறைப்படுத்தினாள்.

சிறைக்குச் சென்ற அந்த வியாபாரி அங்கு அடைத்து வைக்கப்பட்ட அந்தணர்களுடன் நல்ல தொடர்பு கொண்டு சிவபூஜையிலும் சிவவழிபாட்டிலும் ஈடுபட்டுத் தொடர்ந்து செயல்பட்டு, வந்தான்.

அதை அறிந்த அசுரன் தாருகன் அதைத் தடுக்க முற்பட்டு அந்தணர்களையும் ஸுப்ரியனையும் மிகவும் கொடுமைக்கு உள்ளாக்கி அதிகமாகத் துன்புறுத்தினான்.

பக்தர்கள் ஹிம்ஸிக்கப்படுவதைச் சகியாத பரம்பொருளான சிவபெருமான் லிங்கரூபத்திலிருந்து வெளிப்பட்டு, தாருகனைத் தன் நெற்றிக் கண்ணால் எரித்துச் சாம்பலாக்கினார்.

பார்வதியின் அருளைப் பெற்ற தாருகையும் தன் தவறை உணர்ந்து வரத்தைத் துஷ்பிரயோகம் செய்து அழிந்து போகாமல் தன் குலமும் வம்சமும் அழியாமல் காப்பாற்றிச் செயல்பட்டாள்.

துஷ்டர்களை அழித்து, பக்தர்களைக் காக்க, பரமேசுவரன் தாருகாவனத்தைத் தன் இருப்பிடமாக ஏற்றுக் கொண்டு அருள்பாலித்து வருகிறார்.

ஆலயத்திற்குச் செல்லும் வழி

ஹைதராபாத்திலிருந்து பூர்ணா சந்திப்பை அடைய வேண்டும். இது நிஜாமாபாத்திலிருந்து மண்மாட் செல்லும் மீட்டர் கேஜ் ரயில் பாதையில் உள்ளது. பூர்ணா சந்திப்பிலிருந்து சோண்டி ரயில் நிலையத்தில் இறங்கி அங்கிருந்து 4 மைலில் உள்ள ஔண்டா இடத்தை அடைய வேண்டும். இது ஒரு கரடுமுரடான பாதை.

தயாமூர்த்தியைத் தரிசித்து அருள்பெற விழைவோரை இந்தக் கரடுமுரடான பாதை என்ன செய்யும்?

# 9. விசுவநாதர்

'விச்வம்' என்பதற்கு உலகு என்றும், 'ஈசர்' என்றால் காப்பவர் என்றும் பொருள். எனவே விசுவேசுவரர் என்பதற்கு உலகைக் காப்பவர் என்று பொருள். 'நகரேஷு காஞ்சீ' எனப் புகழ்பெற்ற காஞ்சி மாநகரத்தை அறியாதோர் யார்?

இதற்கு 'வாராணஸீ' என்ற மற்றொரு பெயரும் உண்டு. இது ஒரு காரணப் பெயர். அதாவது வாராணா அஸீ என்னும் இரு நதிகள் கூடுமிடத்தில் இந்தப் புனித நகரம் அமைந்துள்ளதால் இதற்கு வாராணஸீ என்று பெயர்.

இதற்கு மற்றொரு காரணப் பெயரும் உண்டு. இதை 'அவிமுக்தம்' என்றும் அழைப்பர். சிவபெருமானால் விடப்படாது இருத்தலால் இப்பெயர் ஏற்பட்டது. புனிதகாசிக்கு ஆனந்தவனம், மகாச்மகாமை என்றும் பெயர்கள் உண்டு.

"காசியைப் போன்ற பட்டணமும் இல்லை, தாயைப் போன்றொரு தெய்வமுமில்லை" என்று ஸ்காந்த புராணத்தில் காசிகாண்டம் கூறுகிறது.

காசிமா நகரத்தில் அனேகக் கோவில்கள் உள்ளன. அவற்றில் மிகவும் பிரதானமாகக் கருதப்படுவது விசுவநாதர் ஆலயம்.

காசியின் முக்கிய ஆலயம் விசுவநாதர் ஆலயமாகும். அடுத்தபடி முக்கியத்துவம் வாய்ந்தது விசாலாக்ஷீ ஆலயம். அதன்பின் அன்ன பூரணீ ஆலயம் என யாவரும் அறிவர்.



விசுவநாதர்

தியானச் சுலோகம்

ஸாநந்தமாநந்த வனே வஸந்தம்
நந்தகந்தம் ஹதபாப வ்ருத்தம் |
வாராணஸீ நாதம் அநாதநாதம்
ஸ்ரீ விஸ்வநாதம் ஸரணம் ப்ரபத்யே ||

கோவிலின் அமைப்பு :

விசுவநாதர் : லிங்கத்தின் சிகரத்தில் தாமிரத்தகடு பதிக்கப்பட்டுள்ளது. லிங்கத்தைச் சுற்றிலும் வெள்ளித் தகட்டினால் ஆன கட்டு உள்ளது. சிகரத்தின் மேல் உள்ள தாமரத் தகட்டிற்குத் தங்கமூலாம் பூசப்பட்டுள்ளது.

விசாலாக்ஷி ஆலயம்

இந்த ஆலயம் விசுவநாத ஆலயத்திலிருந்து அதிகத் தூரத்தில் அமைந்துள்ளது. அன்னையின் பூஜை வழிபாட்டு

முறைகள் யாவும் மிகவும் சிறந்த முறையில் நடைபெறுகின்றன.

அன்னபூரணி ஆலயம்

காசி மாநகரில் அக்ஷயவடம் என்பது மிகவும் புகழ் பெற்ற இடம். இந்த இடம் எங்கே? விசுவநாதரின் ஆலயத்தின் பெரிய வாயிலிலிருந்து தாண்டிச் சென்றால் ராஜமந்திரம் உள்ளது. அந்தச் சந்தின் இடதுபுறம் புகழ்பெற்ற சனி பகவானின் கோவில் உள்ளது. இதன் இடதுபுறத்தில் அக்ஷயவடம் உள்ளது.

இந்த அக்ஷயவடம் முக்கியத்துவமும் புகழும் வாய்ந்தது. இதற்கு மேற்கில் உள்ள சந்தின் இடது புறத்தில் அன்னபூரணி ஆலயம் உள்ளது. இந்த ஆலயத்தை மனதில் நினைக்கும் பொழுதே ஆதி சங்கர பகவத்பாதர் அருளிச் செய்த 'அன்னபூர்ணாஷ்டகம்' நினைவிற்கு வராமல் இருக்குமா?

(அன்னபூர்ணாஷ்டகம் படிக்க விரும்புவோரும், அம்பாளைப் பற்றிய இதர ஸ்தோத்திரங்களை அறிய ஆவலுள்ளோரும் எமது சுபமங்கள ஸ்தோத்ரம் 2ஆவது வால்யூமான துணைபுரியும் தோத்திரங்கள் என்ற புத்தகத்தையும், 5ஆவது வால்யூமான அருள் சுரக்கும் அன்னை என்ற புத்தகத்தையும் படிக்கலாம்.)

இந்தக் கோவிலில் எல்லாப் பண்டிகைகளும் விசேஷமாகக் கொண்டாடப்படுகின்றன. மிக விசேஷமானது தீபாவளிப் பண்டிகை ஆகும்.

## இத் தலத்தின் இதர விசேஷ அம்சங்கள்

சக்கிர தீர்த்தம், ஞானவாபீ, தசாச்வமேத கட்டம், துள்ஸீ கட்டம், ஸீதா கட்டம் போன்ற தீர்த்தங்களாகும்.

மேலும் ஐந்து நதிகளைக் குறிக்கின்றதும், ஐந்து படிகளைக் கொண்டதுமான பஞ்சகங்காகட்டம் மணிகன்னிகாகட்டம் ஹனுமான் கட்டம் கேதாரக் கட்டம் போன்றவை ஆகும்.

இந்தக் கோயில் அமைந்துள்ள விதம் பாரதகலாசாரத்தையும் பண்பாட்டையும் விளக்குவதாக விளங்குகிறது. குறிப்பாக, பஞ்சகங்கா கட்டத்திலிருக்கும் பிந்துமாதவரின் ஆலயமும் அதன் தென்மேற்கில் உள்ள காலபைரவரின் ஆலயமும் ஆகும்.

முன்னொரு காலத்தில் காசியைத் திவோதாஸன் என்ற அரசன் ஆண்டு வந்தான். அந்த அரசனுக்கு ஒரு சமயம் துண்டி ராஜ கணபதியானவர் சோதிடரின் உருவில் வந்து எதிர்காலத்தை உணர்த்தினார் என வரலாறு கூறு கிறது. அத்தகைய துண்டிராஜ கணபதியின் ஆலயமும் முக்கியத்துவம் பொருந்தியதாகும்.

காசி மாநகரத்தை ஆண்டுவந்த காசி மகாராஜாவின் ஆலயமும் அங்கே உள்ள புனித கங்கையின் மறுபுறம் அரண்மனையும் அவரால் நிறுவப்பட்ட காசிப் பல்கலைக் கழகமும் நம்நாட்டின் கலாசாரப் பண்பையும் பாரதஞான ஆராய்ச்சி சம்பந்தப்பட்ட புராண வெளியீடுகளையும் நன்கு பிரதிபலிக்கும் முறையில் அமைந்துள்ளன.

காசியிலுள்ள சம்ஸ்க்ருதப் பல்கலைக் கழகத்தில் புராதன ஓலைச்சுவடுகள் வேத விற்பன்னர்களால் வெளியிடப்பட்ட உபநிஷத்துகள் புலவர்கள் வெளியிட்ட காவியம் நாடகம் ஆகியவற்றின் பிரதிகளும் பூரணமாக உள்ளன.

யாத்திரீகர்களின் மனதைக் வரும் 'பஞ்சகோசீ' என்ற இடமும் உள்ளது. இது காசியிலிருந்து சுமார் ஐம்பது மைல் தூரத்தில் உள்ளது.

ஆலயத்திற்குச் செல்லும் வழி

இந்தியாவின் நான்கு திசையிலிருந்தும் பக்த கோடிகள் விசுவநாதரை மனதாரத் தரிசித்து அவனுடைய பரிபூரண அனுக்ரத்தைப் பெறுமாறு போக்குவரத்துச் சாதனங்களும் தங்க இடவசதிகளும் அமைக்கப்பட்டுள்ளன.

இப்பொழுது சென்னையிலிருந்து கங்கா-காவேரி எக்ஸ்பிரஸ் ரயில் வணடி காசிக்கு நாம் செல்ல வசதியாக இருக்கிறது.

பல்லாயிரக்கணக்கான பக்தகோடிகள் பிரதிதினமும் பற்பல நிமித்த காரணங்களை முன்னிட்டு இந்தப் புனித ஸ்தலத்தை அடைந்து விசுவேசுவரரின் அருளையும் அன்னபூரணி, விசாலாக்ஷீ ஆகியோரின் அருள் கடாக்ஷத்தையும் பெற்று நற்பலனை அடைந்து பிறவிப் பயனைப் பெறுகின்றனர் என்பது உறுதி.

# 10. த்ரியம்பகேசுவரர்

"த்ரியம்பகம் பஜாமஹே
சுகந்திம் புஷ்டி வர்த்தனம் |
உர்வாருகம் இவ பந்தனாத்
ம்ருத்யோர் முக்ஷீய மாம்ருதாத் ||"

எனப் பிராத்தித்துக் கொண்டே ஆலயத்தின் உள்ளே செல்லும் பொழுது நமக்குத் தென்படுவது அமைதியான கர்ப்பக்கிரகம். அதன் மத்தியில் எப்பொழுதும் நீர் நிரம்பியுள்ள ஒருகுழி காணப்படுகிறது. அதில்தான் லிங்கம் உள்ளது. அதன் முடியிலுள்ள துவாரத்தின் மூலம் நீர் எப்பொழுதும் கசிந்து கொண்டேயுள்ளது.



த்ரியம்பகேசுவரர்

த்யானச் சுலோகம்

ஸஹயாத்ரி ஶீர்ஷே விமலே வஸந்தம்
கோதாவரீ தீர பவித்ரே தேஶே |
யத்தர்ஶனாத் பதாக மாஶு நாஶம்
ப்ரயாதி நம் த்ர்யம்பக மீஶமீடே ||

இந்த லிங்கத்திற்கு ஐந்து முகங்களால் ஆன தங்கக் கவசம் அணிவிக்கப்பட்டுள்ளது. பேஷ்வா ஸதாசிவ ராவ் மௌ என்பவரால் ஒரு தங்கக் கிரீடமும் அளிக்கப்பட்டுள்ளது. தினந்தோறும் ஒரு முகம் கொண்ட வெள்ளிக்கவசம் அணிவித்துச் சிவபெருமாளை வழிபடுகின்றனர்.

ஆலய அமைப்பு

இந்தப் புராதன ஆலயம் கருங்கல்லினால் அமைக்கப்பட்டுள்ளது. இதனைச் சுற்றி ஒரு பெரிய மதிற்சுவர்

எழுப்பப்பட்டுள்ளது. உள்ளே நுழைந்ததும் விசாலமான திறந்தவெளியும் இருபுறமும் எப்பொழுதும் எறிந்து கொண்டிருக்கும் பெரிய விளக்குத் தூண்களும் தென்படும்.

கோயிலின் நான்கு புறங்களையும் சுற்றி நோக்கினால் கிழக்கே ஒரு பெரிய மண்டபமும், இதர பக்கங்களில் வெளியே வர வாயில்களும் உள்ளன. கர்ப்பக்கிரகத்திற்குக் கிழக்கே உள்ளே உள்ள மண்டபத்தை ஒரு நீண்ட தாழ்வாரம் இணைத்திருப்பதைக் காணலாம்.

மற்ற விசேஷ அம்சங்கள்

குசாவர்த்தம் என்ற தீர்த்தம் வரலாறு பெற்றது. 'குச' என்பது தர்ப்பை ஆகும். கௌதம முனிவர் தன் தர்ப்பைப் புல்லால் தடுத்ததாலும் முனிவர்கள் முறைப்படி இந்த நீரில் நீராடி நித்யகர்மானுஷ்டானங்களைச் செய்ததாலும் இப்பெயர் ஏற்பட்டது. மேலும் கனசல தீர்த்தம், கஞ்சன தீர்த்தம் முதலியவையும் உள்ளன.

கங்காத்வாரம் என்ற தீர்த்தம் மிகவும் பழைமையும் முக்கியத்துவமும் வாய்ந்தது. இது பிரம்மகிரியிலிருந்து உற்பத்தியாகிறது. இது வெளிப்படும் இடத்தில் கங்கையின் விக்ரஹம் வைக்கப்பட்டிருக்கிறது.

இது கோமுகத்தின் மூலம் கீழே குண்டத்தில் விழுகிறது. இந்தப் பிரம்மகிரியின் அருகில் சித்தர் கோரக் நாதருடைய உருவமும் அவர் செய்த குகையும் காணப்படுகின்றன. இவர் நாத சம்பிரதாயத்தை தோற்றுவித்தார்.

பில்வ தீர்த்தமும், கோவிலுக்கு அருகிலுள்ள கோடி தீர்த்தமும் மிகவும் முக்கியமான தீர்த்தங்களாகும்.

கொண்டாடும் விசேஷங்கள்

12 ராசிக் கோள்களை ஒரு முறை சுற்றிவர குருபகவானுக்குப் பன்னிரண்டு வருடங்கள் ஆகின்றன. அவ்வாறு சுற்றிக் கடகத்திலிருந்து 'சிம்மத்தில் பிரவேசிக்கும் ஒரு பகவானுடைய பெயர்ச்சியை முன்னிட்டு பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை விசேஷ நீராட்டு விழா நடைபெறுகிறது.

கார்த்திகை மாதத்தில் இங்கு நடைபெறும் ரதோத்ஸவம் கண்கொள்ளாக் காட்சியாக அமைவதுடன் பக்தர்களைப் பரவசத்திலும் ஆழ்த்துகிறது.

## புராண வரலாறு

ஒரு சமயம் உலகம் பருவகால மழையில்லாமையால் மிகவும் வரட்சியினாலும் தண்ணீர்ப் பஞ்சத்தினாலும் துன்பற்றிருந்தது. அதுசமயம் கௌதம முனிவர் தனது மனைவி அகல்யையுடன் பிரம்மகிரியில் வருணனைக் குறித்துக் கடுந்தவம் செய்தார்.

வருணனுடைய வரப்பிரசாதத்தினால் அவருடைய சொற்படி ஒரு குளம் தோண்டினார். வருணனுடைய அநுக்கிரஹத்தினால் குறைவற்ற தண்ணீரும் அடையப் பெற்றார். கௌதமர் வழிபட்ட லிங்கத்திற்குக் கௌதமேசுவரம் என்று பெயர்.

மஹாதபஸ்வியான கௌதமர் தன்னுடைய நற்செய்கைகளினாலும் தபோ பலத்தினாலும் ஆசிரமத்தையும், அதன் சூழலையும் செழிப்படையச் செய்தார். அந்த வள

மையையும் செழிப்பையும் கண்ட மற்ற முனிவர்கள் தத்தம் குடும்பத்தோடு அங்கு குடியேறினர்.

சில நாட்களுக்குப் பிறகு பொய்யான அவதூறுகளை மெய்யென நம்பி, கௌதமரை அவரது மனைவியுடன் கூட பிரம்மகிரியைவிட்டுத் துரத்த எண்ணம் கொண்டனர். இதற்காக அவர்கள் விநாயகரைத் துதித்து வழிபட்டனர்.

அவரும் முனிவர்களுடைய செயல் மிகவும் தவறானது என்றும், அந்தச் செயலின் விளைவை அநுபவிப்பார்கள் என்றும் கூறி மறைந்தார்.

விநாயகர் ஒரு பசுவின் உருவெடுத்து கௌதமரின் பயிர்களை மேயத் தொடங்கினார். அதைக் கண்டு சினங் கொண்ட கௌதமரும் அப்பசுவைத் தடியால் அடிக்க முயன்றார்.

அது மாயப் பசுவானதால் உடனே உயிர்துறந்தது. அதைக் கண்ட முனிவர்கள் கௌதமருக்குப் பசுவதை செய்த தோஷம் ஏற்பட்டு விட்டதாகக் கூறி அந்தத்தோஷ நிவர்த்திக்காக வழிமுறை தேடினர்.

முடிவில் பிரம்மகிரியை 101 தடவை வலம் வரவேண்டும் என்றும் ஒரு கோடி மண் லிங்கங்களை வழிபடவேண்டும் என்றும் ஆணையிட்டனர்.

கௌதமரும் அந்த ஆணையினால் மனம் நொந்து சிவபெருமானைக் குறித்துக் கடுந்தவம் புரிந்தார். சிவபெருமானும் அவரது தவத்தினால் மனமிரங்கி அவர் முன் தோன்றினார். "கௌதமா! யாம் முனிவர்களின் தீய செயலை அறிவோம். உமக்கு எந்தப் பாபச் செயலும் அணுகாது" என்று கூறினார்.

உடனே தன் சடையிலிருந்து சிறிதளவு கங்கையையும் அவருக்குப் பிரஸாதமாகக் கொடுத்தரர். பிரம்மகிரியின் அத்திமரத்தின் வேரிலிருந்து வெளிவரும் கங்கைக்குச் சமமான நதியில் நீராடினார். அயுனால் அதே இடத்திற்குக் 'கங்காத்வாரம்' என்று பெயர் ஏற்பட்டது.

கௌதமரினால் கொண்டு வரப்பட்ட கங்கையாதலால் அதற்குக் கௌதமீ என்று காரணப்பெயர் சூட்டப்பட்டது. கௌதமர் தனக்குத் துன்பம் விளைவித்த முனிவர்களையும் தூய்மைப்படுத்தி நல்ல பிரவிருத்தியில் அவர்களை ஈடுபடுத்த, கங்கையை வேண்டிக்கொண்டார். தன்னுடைய குசத்தைக் கொண்டு இந்தக் கங்யையின் போக்கை அவர் மாற்றியமைத்ததால் இதற்குக் குசாவர்த்தம் என்று பெயர்.

ஆலயத்திற்குச் செல்லும் வழி

பம்பாய்-மன்மட் பாதையில் நாசிக் உள்ளது. அங்கிருந்து பஸ்ஸில் சென்றால் இந்த இடத்தை அடையலாம். பிரம்மகிரியில் உள்ள கங்கையின் தோற்றம் கண்கொள்ளாத காட்சியாகும். இதைக் காண மலைமேல் பல்லக்கிலோ அல்லது வண்டியிலோ செல்ல வேண்டும்.

# 11. கேதாரீசுவரர்



கேதாரீசுவரர்

தியானச் சுலோகம்

மஹாத்ரி பார்ஶ்வேச தடே ரமந்தம்
ஸம்பூஜ்யமாநம் ஸததம் முநீந்த்ரை : |
ஸுராஸுரைர் யக்ஷம் ஹோர காட்யை:
கேதாரமீஶம் ஶிவ மேகமீடே ||

உத்தரப் பிரதேசத்தில் இமயமலைத் தொடர்ச்சியில் அமைந்துள்ள இந்தப் புனிதஸ்தலம் காசியைப் போன்ற மற்றொரு முக்கிய புண்ணிய க்ஷேத்ரம். அனேககோடி

யாத்ரீகர்கள் வந்து தரிசித்துச் செல்லும் முக்கிய ஸ்தலம். இது நிலப்பரப்பிலிருந்து சுமார் 12,000 அடி உயரத்தில் உள்ளது.

இந்த மலையில் ருத்ர இமாலயம், உத்காரி கண்ட, சொர்க்க ரோஹிணீ, பிரம்மபுரீ, விஷ்ணுபுரீ ஆகிய ஐந்து சிகரங்கள் உள்ளதால் இதற்குப் பஞ்சபர்வதம் என்றும் பெயர். மேலும் இந்த மலையை ருத்ர இமாலயம் என்றும் ஸுமேரு பர்வதம் என்றும் அழைப்பர்.

### ஆலய அமைப்பு

இந்த ஆலயத்தின் மூர்த்தி ஒரு பெரிய லிங்க வடிவில் உள்ளது. இது தெற்குத் திக்கைப் பார்த்த ஸந்நிதியை உடைய ஆலயமாகும். இந்த ஆலயத்தில் எல்லா மூர்த்தி களையும் ஒன்றாகத் தரிசிக்க வசதியாக கேதாரகௌரீ, பாண்டவர், திரௌபதீ, விநாயகர் முதலிய மூர்த்திகளும் உள்ளன. சுத்தமாகக் குளித்து வழிபட்டு லிங்கத்தின் மீது நெய் தடவித் தழுவிக் கொள்ளுதல் மரபாக உள்ளது.

### ஆலயத்திற்குச் செல்லும் வழி

கங்கோத்திரியிலிருந்தும், யமுனோத்திரியிலிருந்தும் நீர் எடுத்து, கேதாரத்திற்குச் சென்று, கேதாரீசுவரருக்கு அபி ஷேகம் செய்வதைப் பக்தர்கள் வழக்கமாகக் கொண்டுள்ள னர். ஆகவே பக்தர்கள் முதலில் ஹரித்வாரம், ரிஷிகேசம் சென்று தேவப்பிரயாகை வழியே தேஹ்ரீ, தரசுவை அடைந்து யமுனோத்திரிக்குச் செல்வர். அங்கிருந்து உத்தர காசிவழியாயக் கங்கோத்திரிக்குச் சென்று, த்ரியுகிநாரா யண் கௌரிகுண்டம் வழியே சென்று, கேதாரத்தை அடைவர்.

### மற்றொரு மார்க்கம்

ரிஷிகேசம், செல்ல மற்றொரு மார்க்கமும் உண்டு.

பக்தர்கள் நேராக தேவப் பிரயாகை, ஸ்ரீநகர், ருத்திரப் பிரயாகை, ஊசிமடம் வழியாகவும் கேதாரத்தை அடைய லாம். காதகோட்டத்தினின்றும் புறப்பட்டு பீம்தல், த்வா ரஹத், கர்ணபிரயாகை, சமோலி, ஊசிமடம் வழியே கேதாரத்திற்குப் போகலாம்.

மறுபடியும் சமேமாவிலிருந்து விஷ்ணுபிரயாகைக் வழி யாகப் பத்திரிநாத்துக்கும் போகலாம். போகும்போது ஹரித்துவார்ரத்தின் வழியாகவும் திரும்பும்போது காத கோடம் வட்யாவும் வருவதுதான் வழக்கம். கௌரீ குண்டத்திலிருந்து கேதாரம் செல்லும் பாதை கரடுமுர டானது. ஆனாலும் இயற்கை வனப்புடன் கூடியது.

கௌரீ குண்டத்தில் நீராட உஷ்ண நீரூற்றுக்கள் இருக் கின்றன. மேஷராசியில் சூரியன் பிரவேசிக்கும்போது (அதாவது புத்தாண்டு தினத்தன்று) இக்கோவிலை, தரிச னத்துக்ாகச் சிறப்பாகத் திறப்பார்கள்.

பன்னிரண்டு வருடங்களுக்கொருமுறை 'கும்பமேளா' கொண்டாடப்படுகிறதல்லவா? அதுசமயம் கேதாரம், பத்ரிநாத் ஆகிய தலங்களுக்குச் செல்வது பெரும் புண்ணி யம் ஆதலால் அங்கு திரளாகப் பக்தர்கள் செல்கின்றனர்.

## புராண வரலாறு

ஒருசமயம் நரநாராயணனின் வடிவில் திருமால், பரம சிவனாரைப் பார்த்திவ லிங்கத்தில் வழிபட்டுத் தவமிருந் தார். மனமகிழ்ந்த பரமசிவன் தோன்றியதும், "நீங்கள் எப்பொழுதும் கேதாரன் சிகரத்தில் இருக்க வேண்டும்" என வேண்டிக் கொண்டார்.

கோதாரம் என்ற சொல் சொன்னமாத்திரத்திலேயே அப்படிச் சொல்லித் துதிப்பவர்களைத் தூய்மைப்படுத்த வேண்டும் என்று வேண்டினார். ஈசனும் அந்தப் பிரார்த்தனையை சிரமேற் கொண்டார்.

மகாபாரதக்கதை பஞ்சபாண்டவர்கள் கந்தமாதன மலைப்பகுதிக்குப் பல தடவைகள் விஜயம் செய்ததாக அறிவிக்கிறது. பரமசிவனைக் குறித்து பாசுபதாஸ்திரம் பெறுவதற்காக அர்ச்சுனர் இங்குதான் தவமிருந்தானாம். அது சமயம் அர்ஜுனனைத் தேடிக் கொண்டு பாண்டவர்கள் அங்கு வந்தனர்.

அப்போது திரௌபதி வழியில் விரும்பிய வாசமுள்ள மலரைக் கொய்து கொடுத்தான் பீமன் என்றும் கூறப்படுகிறது. இந்நால்வரும் ஸ்வர்க்கா ஹோரை சிகரத்துன் மூலமாகச் சொர்க்கம் சென்றதாகவும் கூறப்படுகிறது.

மந்தாகினி ஆறு கேதாரத்தின் அருகில்தான் தோன்றுகிறது. இதன் மற்றொரு பெயர் காளி கங்கையாகும். அலகநந்தா நதியுடன் ருத்ரபிரயாகை என்ற இடத்தில் இது ஒன்றுகலக்கிறது. இந்த இடம் கேதாரத்திலிருந்து சுமார் 45மைல் தூரத்தில் உள்ளது.

பத்ரிநாத், கேதாரநாத் ஆகிய இடங்களை ஒரு பெரிய உயர்ந்த மலை தனித்தனியாகப் பிரிக்கிறது. அதனால் பிரயாண தூரம் அதிகமாகிறது.

# 12. குசுமேசுவரர் என்ற கிருஷ்ணேசுவரர்



கிருஷ்ணேசுவரர் (குசுமேசுவரர்)

த்யானச் சுலோகம்

இலாபுரே ரம்ய விஶாலகே (அ)ஸ்மிந்
ஸமுல்ல ஸந்தம் ச ஜகத்வரேண்யம் |
வந்தே மஹாதார ஸ்வபாலம்
க்ருஷ்ணேஶ்வராக்யம் ஶரணம் ப்ரபத்யே ||

இந்திய கலைச்சிற்பங்களைப்பற்றி அறிந்து போற்றாதார் யார்? எல்லோரா குகைச் சிற்பங்கள் சரித்திரப் புகழ்

பெற்றவை. எல்லோராக் குகைச் சிற்பங்கலளக் காண வேண்டுமானால் தங்க வேண்டிய இடம் அதனருகே இந்தோர் மகாராணியால் கட்டப்பட்டுள்ளது. குசுமேசுவரர் ஆலயம் தேவகிரி என்ற தௌலதாபாத்துக்கு அருகே உள்ளது.

எல்லோராக் குகையில் காணப்படும் கைலாசநாதரைச் சிலர் ஜோதிர்லிங்கம் எனக் கருதினாலும் தேவகிரிதான் ஜோதிர்லிங்க க்ஷேத்திரமாகும்.

## புராண வரலாறு

ஸுதர்மன் என்ற அந்தணன் தன் மனைவி ஸுதேஹையுடன் தேவகிரியில் இல்லறம் நடத்தி வந்தார். இன்பமாக எந்தக் குறையும் இன்றி வாழ்க்கை நடத்தி வந்தனர்.

எல்லாச் செல்வங்களையும் பெற்ற அவர்களுக்குப் பிள்ளைச் செல்வத்தை ஆண்டவன் அளிக்கவில்லை. அதனால் ஸுதேஹையின் மனம் மிகவும் நொந்து போயிற்று.

"புந்நாம நரகாத் த்ராயதே இதி புத்ர: ॥"

'புத்' என்ற நரகத்திலிருந்து காப்பாற்றுபவன்தான் 'பிள்ளை' என்ற சாஸ்திர வாக்கை நன்கு அறிந்தவள் ஸுதேஹை. மேலும் சாஸ்திரத்தில் அதிக நம்பிக்கை உள்ளவள்.

செய்வதறியாது இருந்த ஸுதேஹைக்கு ஒரு தினம் தன் தமயனின் மகளான குஸுமையைத் தன் கணவனுக்கு ஏன் மறு விவாஹம் செய்து வைக்கக்கூடாது என்ற எண்

ணம் தோன்றியது. பலநாள் சிந்தித்து முடிவில் அதைச் செயலிலும் நிறைவேற்றிவிட்டாள். குஸுமைக்கும் ஸுதர் மனுக்கும் விவாகம் இனிதே நடைபெற்றது.

ஸுதர்மன் தனது இரு மனைவிகள் ஸுதேஹை, ஸுமை ஆகியோருடன் இனிதே இல்லறம் நடத்தி வந் தான். குஸுமை, சிவனை ஆராதித்துப் பக்தியுடன் வழி பட்டு வந்தாள். அவள் தினமும் மண்ணினால் லிங்கம் செய்து வழிபட்டு அதைப் பூஜையின் முடிவில் குளத்தில் போட்டுவந்தாள்.

சிவபெருமானின் அருளால் காலப்போக்கில் ஸுதர்ம னுக்கும், குஸுமைக்கும் பிள்ளையில்லாக் குறையை நீக்க ஸுப்ரியன் பிறந்தான். குழந்தையின் வரவினால் யாவரும் மகிழ்ச்சியினால் ஆனந்தம் கொணடாடினர்.

ஸுதேஹையும் தனக்குப் பிள்ளையில்லாத குறையை மறந்து ஸுப்ரியனைத் தன் சொந்த மகன் போல் கண் காணித்து வந்தாள்.

ஆனால் நீண்டகாலம் அமைதியாகச் சென்று கொண் டிருந்த ஸுதர்மனின் குடும்ப வாழ்க்கையில் சலசலப்பு தொடங்கியது. ஸுதேஹை தனக்குத்தானே ஒரு தாழ்வு மனப்பான்மையை வளர்த்துக் கொள்ளலானாள்.

தனக்கு வீட்டில் மதிப்பும் பெருமையும் குறைந்து வரு வது போலவும், அதற்குக் காரணம் ஸுப்ரியனின் வருகை தான் என்றும் எண்ணலானாள்.

இந்த எண்ணம் அடிக்கடி அவளுடைய மனதை வாட்டி எடுக்க ஆரம்பித்து முடிவில் ஒரு விஷமரமாக உருவெடுத் தது. முடிவில் ஒரு திடமான முடிவெடுத்தாள்.

எந்தக் குழந்தையின் வரவிற்காக ஏங்கித் தவித்துத் தன் கணவனுக்கு மறுமணம் செய்து வைத்தாளோ, அந்தக் குழந்தையை வெறுக்கலானாள். முடிவில் ஒரு திடமான முடிவுடன் கொல்லவும் துணிந்து விட்டாள்.

ஒருநாள் இரவு ஸுதேஹை, குழந்தை ஸுப்ரியன் உறங்கும் அறையில் சென்று யாருமில்லாத சமயத்தில் எவருக்கும் தெரியால் குழந்தையைக் கொன்று விட்டாள்.

ஒன்றும் அறியாத குஸுமை வழக்கம் போல் தெய்வ வழிபாட்டை முடித்துக் கொண்டு இறுதியில் மண்லிங்கத்தைக் குளத்தில் போட்டுத் திரும்பினாள்.

அப்பொழுது ''நான் செத்துப் பிழைத்தேன்'' எனக் கூறிக் கொண்டு தன் மகன் தன்னை நோக்கி வருவதைக் கண்டு திடுக்கிட்டாள்.

நிகழ்ந்தது எதுவும் அறியாத குஸுமையின் கவலையைத் தீர்க்க அவள் வழிபடும் சிவபெருமான் லிங்கத்தினின்றும் நேரில் தோன்றி, நடந்த எல்லாவற்றையும் தெளிவுபடுத்தினார். அவர் பக்தைக்கு வினை செய்தவளை அழிக்க விரும்பினார்.

ஆனால் குஸுமை அவ்வாறு ஸுதேஹையை அழிகக் விரும்பவில்லை. அவளை மன்னித்து ஏற்றுக் கொண்டாள். குஸுமையின் விருப்பப்படி குசமேசுவரர் என்ற பெயருடன் நிலைத்து, பக்தர்களுக்கு அருள் தந்து காக்கின்றார்.

இந்த லிங்கத்திற்குக் கிருஷ்ணேசுவரர் என்ற மற்றொரு பெயரும் உண்டு. காரணம் சிவலிங்கம் சிவந்த நிறத்துடன் விளங்குகிறார். 'சிவந்த நிறமுடையவர்' என்பதை விளக்க இவ்வாறு அழைக்கப்படுகிறார்.

பார்வதி தேவி குங்குமப் பூவால் சிவபெருமானை வழி பட்டு வந்தாள். மராட்டி மொழியில் 'க்ருஷ்ண' என்றால் குங்குமப்பூ என்று பொருள். ஆகவே பெருமானைக் கிருஷ்ணேசுரர் எனவும் அழைக்கின்றனர்.

ஹனுமார் கோவிலும், பைரவர் கோவிலும் ஆலயத் திற்குச் சமீபத்தில் உள்ளன. கோவிலின் சபா மண்டபத் தில் கச்சப (ஆமை) வடிவம் கொண்ட மூர்த்தியைக் காணலாம்.

பல பக்தர்கள் சென்று வழிபட்டுச் சிவபெருமானின் அருளை பெற மிகவும் வசதியாகச் சாலை அமைப்புகளும் தங்குமிட வசதிகளும் உள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

ஜோதிர்லிங்கங்கள் என்ற இந்நூல் நிறைவு பெற்றது.



|| சுபம் ||



## ஆசிரியை K. N. S. ஐப் பற்றி



டாக்டர் கே. என். சரஸ்வதி அம்மையார் தொடக்கக் காலத்தில் பாரத சாரணர் இயக்கத்தின் வழிகாட்டி - முதல்வராகவும் (Guide - Captain) காந்தி கிராமம் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி மாணவர் ஒன்றியத் துணைச் செயலாளராகவும் சென்னை பள்ளிகள் முன்னேற்ற மாநாட்டு (schools - improvement - Conference) உறுப்பினராகவும் சென்னை - தியாகராயநகர் அரசினர் பெண்கள் உயர்நிலைப்பள்ளி ஆலோசனைக் குழுவின் செயலாளராகவும், சென்னை வித்யோதயா பெண்கள் ஆங்கிலப்பள்ளியின் பொருளாளராகவும் தியாகராயநகர் பெண்கள் கூட்டுறவு மன்றத்தின் இயக்குநராகவும் பல துறைகளில் பரபரப்பாகப் பணியாற்றிய இவர் பின்னர் மன இயல் ஆய்வு நிறுவனத்தின் கிளை ஆய்வுத் தொடர்பாளராகவும் (Field-reporter) அமெரிக்காவில் உள்ள சில மன இயல் துறை நிபுணர்களின் சங்கங்களின் ஆலோசகராகவும் இருந்திருக்கிறார். பெண்களுக்கு, குறிப்பாக ஆதரவற்றோருக்கு, ஆங்கிலம், கணிதம், ஒழுங்கைப் பற்றிய பாடம் ஆகியவற்றைக் கற்றுத் தருவதில் இவருக்குச் சுமார் பத்தாண்டுகள் அநுபவம் உண்டு. கௌன்ஸெலிங் (counselling) சம்பந்தப்பட்ட பல தேசிய, அனைத்துலக மாநாடுகளிலும் ஆய்வுப் பட்டறைகளிலும் (Workshops) கலந்து கொண்டு அத்துறையினருக்கும் பொதுமக்களுக்கும் நல்ல ஆலோசகராக இருந்து தன் உதவியை வழங்கி வருகிறார். திருமதி **K. N. S.,** மகான்களின் வாழ்வும் வாக்கும், சிறப்புத் திருத்தலங்கள், பதஞ்சலி யோக சூத்திரம், இறப்பும் பின் பிறப்பும், தன் மதிப்பை உயர்த்த வழிகள், சினேகம் சிறக்கச் சிந்தனைகள் உழைப்பின் உயர்வில் வாழ்வு, திருமணம், இயற்கை வைத்தியம், பெண்களுக்காக, நவராத்திரி போன்ற நூல்களின் ஆசிரியையும் ஆவார்.